# நூல் அமைப்பு


| | |
|---|---|
| நூலின் பெயர் | : அமுதும் தேனும் |
| ஆசிரியர் | : கவிஞர் சுரதா |
| மொழி | : தமிழ் |
| பொருள் | : கவிதை |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| ஐந்தாம் பதிப்பு | : ஆகஸ்ட் - 2005 |
| நூலின் அளவு | : 1 X 8 கிரௌன் |
| எழுத்து | : 12 புள்ளி |
| பக்கம் | : 80 |
| பைண்டிங் | : சாதா அட்டை பைண்டு |
| விலை | : ரூ. 25 |
| நூல் வெளியீடு | : சுவாதி பதிப்பகம்,<br>27/13, ரெட்டி தெரு,<br>ஆலந்தூர்,<br>சென்னை - 600 016. |
| ஒளியச்சு | : திருவள்ளுவர் வரைகலையகம்<br>சென்னை - 94.<br>தொலைபேசி எண்: 24722205 |
| அச்சிட்டோர் | : சேகர் அச்சகம், சென்னை - 5. |

இந்த
மூன்று
முத்துக்களுக்கு

*எனது அன்னையார் சண்பகம் அம்மையாருக்கும்*
*எனது தந்தையார் திருவேங்கடம் அவர்கட்கும்*
*என்னை வளர்த்த அத்தை செங்கம்மாள் அவர்கட்கும்*
*இப்பாட்டு நூலைப் படையலாக்குகிறேன்.*

*சுரதா*

# எனது நீண்ட நாள் ஆசை

அமுதும் தேனும்

*இந்நூல் வரலாற்றுக் குறிப்புகளின் அடிப்படையில் நான் எழுதியிருக்கும் கவிதை நூல்.*

*மேலை நாட்டில் இப்படிப்பட்ட கவிதைகள் அதிகம் வெளிவருகின்றன. இங்கு அதிகம் வெளி வருவதில்லை.*

*வரலாற்று அறிவு தேய்ந்து போயிருக்கும் இந்நாட்டில் இத்தகைய வரலாற்றுக் கவிதைகள் வெளிவந்தால் இதன் மூலம் வரலாறு வெளிச்சம் பெறும்.*

*எனவேதான், நான் நடத்தி வந்த காவியம், இலக்கியம், ஊர்வலம், சுரதா ஆகிய இதழ்களில் வரலாற்றுக் கவிதைகளை எழுதியும், அவ்வாறு பலரை எழுதச் செய்தும் கதைக் கவிதைகட்கு முதலிடம் அளித்து வந்தேன்.*

*இது நூலாக வெளிவந்ததன் மூலம் எனது நீண்ட நாள் ஆசை நிறைவேறியிருக்கிறது.*

*15 - 8 - 2005*
*சென்னை - 78.*

*- சுரதா*

# மங்கையும் மாவீரனும்

தக்கோலம் என்கின்ற சிற்றூர் தன்னில்
சமரிட்டுப், பழித்தோரைக் கிழித்துக் கொன்று,
கொக்கரித்துக் கொண்டிருந்த சந்தா சாய்பைக்
கொடுவாளால் எச்சரிக்கை செய்து, பின்னர்
எக்காள மிட்டபடி குதிரை வீரர்
எல்லோரும் தீப்பந்தம் ஏந்திக் கொண்டு,
வைக்காவூர் வழிநோக்கி விரைந்து சென்றார்.
வாள்வீரன் கான்சாகிப் முன்னே சென்றான்.

நெல்லூரில் ஓரிரண்டு நாட்கள், அந்த
நெருப்புவிழி கான்சாகிப் தங்க லானான்.
செல்லூரில் தேரோட்டம் பார்த்து விட்டுத்
திரும்பிவந்து கொண்டிருந்தாள் மங்கை மாசா.
கல்வீரன் கண்களினால் கோடு போட்டான்.
கட்டழகி கால்விரலால் கோடு போட்டாள்.
வில்வக்காய் தனைக்காட்டிச் சொக்க வைத்தாள்.
விக்கலுக்கு நீர்கேட்டுச் சிக்க வைத்தான்.

நீர்தந்தாள். அழகியிடம் நெஞ்சம் தந்தான்.
நெஞ்சத்தை அவன்தரவே அவளும் தந்தாள்.
தேர்தந்த வீதியிலே போகும் பெண்ணே!
செங்கனிகள் தருவாயோ என்று கேட்டான்.
ஊர்தந்த தோட்டத்துக் கனியை நெஞ்சில்
உறவுகொண்டோர்க்கிலை என்றாசொல்வேன் என்றாள்
கார்தந்த கருங்கூந்தல் மங்கை மீது
கண்வைத்தான்; கான்சாகிப் கையை வைத்தான்.

குதிரையின்மேல் மாசாவைத் தூக்கி வைத்தான்.
குயில்மங்கை அன்னவனை அணைத்துக் கொண்டாள்.
புதுமயக்கம் வருகின்ற தென்று சொன்னான்.
புகழ்மயக்கம் வருவதுதான் ஆபத் தென்றாள்.
எதுவரைக்கும் நம்பயணம் என்று கேட்டாள்.
இருட்டுகின்ற நேரம்வரும் வரையில் என்றான்.
எதிர்வெயிலின் கோபத்தைப் பாராய் என்றான்.
ஏந்திழையாள் முந்தானைப் பந்தலிட்டாள்.

முத்து முத்தாய் சிரிப்பவளே! நிழலுக்காக
முந்தானைப் பந்தலிடும் பருவப் பெண்ணே!
புத்தியைநீ தீட்டென்று பெற்றோர் சொன்ன
போதனையைக் கேளாமல் ஒவ்வோர் நாளும்
கத்தியினை நான்தீட்டிக் கொண்டி ருந்த
காரணத்தால் வீட்டைவிட்டுத் துரத்தப்பட்டேன்.
வித்தையின்றி நித்திரையும் இன்றித் தையல்
வேலைசெய்து வெளியூரில் பிழைத்து வந்தேன்.

கத்துகடல் புதுவையில்நான் இருந்து வந்த
காலத்தில் படகோட்டிக் கொண்டி ருந்தேன்.
பத்திரத்தில் கையொப்ப மிட்டு, வெள்ளைப்
பட்டாளம் தனிற்சேர்ந்து பலரை வென்றேன்.
எத்தனையோ பேரெதிர்த்தும் நான்தான் வென்றேன்.
எனையெவரும் வென்றதில்லை என்று ரைத்தான்.
அத்திக்காய் ஆலங்காய் பழுக்கு மன்றி
அவரைக்காய் ஒருபோதும் பழுக்கா தென்றாள்.

சுரந்திருந்த மணற்கேணி யருகே அந்தச்
சுந்தரியும் சுந்தரனும் இறங்க லானார்.
வரந்தரவோ இங்கழைத்து வந்தீர் என்றாள்.
வரம்பெறவே உனையழைத்து வந்தேன் பெண்ணே!
விருந்தமிழ்தம் இனிவேண்டேன் உன்னை யன்றி
வேறெதையும் நான்வேண்டேன் என்று கூறிப்
பொருந்துபுகழ் மாவீரன் அவளைத் தொட்டான்.
பூங்கொடியாள் நல்லுடையை நழுவ விட்டாள்.

உனக்கென்ன வயதென்றான். பதினெட் டென்றாள்,
உன்வயதே ஜோனாஃப்ஆர்க் வயது மென்றான்.
எனக்கென்ன வயதிருக்கும் என்று கேட்டான்.
இருபத்து நான்குவய திருக்கு மென்றாள்.
தனித்தூக்கம் இனிமேலா இனிக்கும்? வண்ணத்
தாமரையா சூரியனைக் கண்டு தூங்கும்?
பனிப்பூவே! பதினெட்டு வயதே! வாவா!
பால்நிலவே என்னருகில் நீவா என்றான்.

முத்துடுத்த வானத்தின் மீது தோன்றும்

மூத்தநிலா வெளிச்சத்தில், முத்த மென்னும்

ஒத்திகையை உருவாக்கி, இன்பக் காதல்

உணர்ச்சியினை விரைவாக்கி, இமையில் ஏறும்

நித்திரையை குறைவாக்கி, நீண்ட நேரம்

நிழலிரண்டை ஒன்றாக்கிக் கொண் டிருந்தார்.

தித்திக்கும் தெள்ளமுதம் உண்ட பின்னர்த்

திறந்தவெளி அரங்கத்தில் உலாவ லானார்.

சத்தென்றால் உள்ளதென்று பொருளாம்; உன்னைத்

தழுவியபின் நானதனை அறிந்து கொண்டேன்.

சித்தென்றால் தன்னைத்தான் அறிவ தென்பர்.

தினையளவே நானென்னை அறிவேன்; சிப்பி

முத்துக்கும் ஒளிவழங்கும் முத்தே! என்றன்

மூச்சாக இருப்பவளே! முல்லைப் பூவே!

சத்தத்தில் இவ்வுலகம் பிறந்த தென்பர்.

தங்கத்தில் நீபிறந்தாய்! அதுவே உன்தாய்!

ஏடறிந்த கொக்கோக விளக்க மெல்லாம்

இன்றேநான் உன்னிடத்தில் அறிந்து கொண்டேன்.

கூடறிந்த குயிலேகேள்; நிலவின் கொம்பு

கூடட்டும் ஓடட்டும் பத்து நாட்கள்.

நாடறிந்த மணமேடை மங்கை யாக்கி

நானுன்னை ஏற்கின்றேன் என்று கூறிச்

சூடறிந்த பகல்மாற்றும் இரவில், அன்னோன்

தும்மலெனப் புறப்பட்டான் சித்தூர் நோக்கி.

# அந்த உழவனும் அணைக்குடி வள்ளலும்

அந்திநிலா உறங்கவில்லை; புதிய வெள்ளம்
அள்ளிவரும் காவிரியும் உறங்க வில்லை;
செந்தமிழ்நூல் ஆய்வோரும் உறங்க வில்லை;
திருடர்களும் காதலரும் உறங்க வில்லை;
வந்தவர்க்கு விருந்திட்டும், பின்னர் யாரும்
வரக்கூடும் என்றுலையில் அரிசி யிட்டும்,
உந்தியெழும் நல்லுணர்வை முகத்தில் காட்டி
உபசரித்து வருவோரும் உறங்க வில்லை.

மணங்கொடுத்து மதுகொடுக்கும் அல்லிப் பூக்கள்
வான்மதியை வரவேற்கும் இரவில், வெள்ளிப்
பணங்கொடுக்கும் காமுகர்க்குப் பவளச் செவ்வாய்ப்
பழங்கொடுக்கும் பரத்தையரும் உறங்க வில்லை.
வணங்குகின்ற நெற்கதிரும் கரும்பும் சேர்ந்து
வளர்ந்துவரும் சோணாட்டில் அமைந்த ஊராம்
அணைக்குடியில், வாழ்ந்தவள்ளல் சட்ட நாதன்
அவனுமன்று நெடுநேரம் உறங்க வில்லை.

கண்ணுறக்கம் இலாதவனாய் நீண்ட நேரம்
கட்டிலின்மீ தமர்ந்திருந்த சட்ட நாதன்
"பெண்மயிலே இங்கேவா" என்ற ழைத்தான்.
பேரழகி அவனருகில் வந்து நின்றாள்.
"எண்ணெய்விளக் கேற்றிவைத்தால் அணையக் கூடும்
என்பதனால் இதோஇந்த நீல வானம்,
வெண்ணெய்விளக் கேற்றுவதைப் பாராய்" என்று
வெண்ணிலவை அவன்சுட்டிக் காட்ட லானான்.

ஆரமுதில் உருவான நிலவை ஆங்கே
அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளை நோக்கி,
"ஊரில் சிலர் உறங்காமல் இருப்ப தற்கும்
ஓவியமே நாமுறங்கா திருப்ப தற்கும்
காரணந்தான் ஏதேனும் உண்டோ?" என்றான்.
"காரணமுண் டதைச்சொல்ல மாட்டேன்" என்றாள்.
"நேரிழைநீ காரணத்தைச் சொல்ல வேண்டாம்"
நின்விழிகள் சொல்லட்டும் இப்போ" தென்றான்.

"கண்சொன்னால் வாய்வருத்தப் படுமே" என்றாள்
"காக்கவைத்தால் நான் வருத்தப்படேனோ" என்றான்.
"எண்ணத்தை உணர்ச்சியிடம் ஒப்ப டைத்தால்
இந்நிலைதான் உருவாகும். இங்கே உங்கள்
விண்ணப்பம் நிறைவேற வேண்டு மாயின்
விடியும்வரை காத்திருக்க வேண்டும்" என்றாள்.
"தண்ணீரின் சாயலிலே தங்கி வந்த
தாமரையே! தாமதம்செய் யாதே" என்றான்.

வாய்ச்சீரும், முத்துப்பல் வரிசைச் சீரும்,

வளைந்தநிலாப் பிறைபோன்ற நெற்றிச் சீரும்

தாய்ச்சீரும், குடும்பநலச் சீரும் கொண்ட

தையலவள் அன்னவனைக் கூர்ந்து நோக்கக்

காய்ச்சீரில் பெயரமைந்த சட்டநாதன்

காரிகையைப் பார்த்தபடி "பருவப் பெண்ணே!

பாய்ச்சீரில் படுக்கைச்சீர் பிரிப்போம் என்றான்.

"பண்டிதரின் வேலையெதற் கிப்போ" தென்றாள்.

ஏழையடி ஏழைகளாய் வறுமைக் கோட்டில்

இருந்தவர்க்கும், பாவலர்க்கும் நாவ லர்க்கும்,

பேழையடிப் பேழைதனில் சேர்த்து வைத்த

பெருநிதியை வழங்கிவந்தோன் அவளை நோக்கித்

"தாழையடித் தாழையென ஒதுக்கி என்னைத்

தள்ளாதே பெண்மயிலே" என்று ரைத்தான்.

வாழையடி வாழையென வந்த மங்கை

வட்டத்திற் குள்ளடங்கும் சதுர மானாள்.

"தேரழுந்தூர் தனிற்பிறந்த பெண்ணே! இங்கே

திரும்பிப்பார்" என்றவுடன் திரும்பிப் பார்த்தாள்.

நேரசையும் நேரசையும் தேமா வாகும்;

நிறைநிலவே! உன்கன்னம் தேமா வாகும்.

ஓரவிழி பாய்ச்சுகின்ற பருவ காலம்

உறவுக்கும் இரவுக்கும் இனிமை சேர்க்கும்.

நீரருவி போன்றவளே! நிழலே! என்றான்.

நெய்கனிந்த கருங்குழலி நாணம் கொண்டாள்.

பூவையென்னும் பெயர்கொண்ட காயாம் பூவே!

பூங்கொடியே! மலர்சூடி மகிழும் பெண்ணே!

சேவலின்தீக் குடுமியெனும் பூவைக் கொய்து

செறிகுழலில் நீசூடிக் கொண்டா லென்ன?

காவியென்னும் கருங்குவளை மலர்மட் டுந்தான்

கருங்குழலுக் கெழில்தருமோ? என்றான் வள்ளல்.

"மாவெடுத்துப் பணியாரம் சுடுவா ரன்றி

மண்ணெடுத்துச் சுடுவாரோ?" என்றாள் மங்கை.

கூரம்பு விழிகாட்டி வாட்டும் மாதே1

குற்றாலம் போய்வருவோம்; குற்றா லத்தில்

வீரத்தை நினைவூட்டும் மலையின் உச்சி

மீதிருந்து வழிந்தபடி இருக்கும் தண்ணீர்,

தூரத்துப் பார்வைக்குப் பாம்பின் சட்டை

தொங்குவது போன்றிருக்கும்; அருவி நீரின்

ஈரத்தைத் தேன்துளிகள் ஈர மாக்கும்.

இலைநிறைந்த பலாமரங்கள் அழகு சேர்க்கும்.

குளிர்தூங்கு குற்றாலம் எனினும் ஆங்கே

குரங்குகளும் மரக்கிளையில் இரவில் தூங்கும்;

தளிர்தூங்கும், அத்தளிரில் பனிநீர் தூங்கும்;

சண்பகப்பூ உதிர்ந்தாங்கே தரையில் தூங்கும்;

இளங்காற்று மாலைவரும் வரையில் தூங்கும்;

எண்ணற்ற மூலிகைகள் சேர்ந்து தூங்கும்;

தளராத மாமலையின் சிகரம் தன்னில்

தழும்புநிலா படுத்தபடி காற்று வாங்கும்.

ஆற்றோசை திருச்சியிலே கேட்கும்; முந்நீர்
அலையோசை நாகையிலே கேட்கும்; தென்னங்
கீற்றோசை சோழவந்தான் தன்னில் கேட்கும்;
கிண்கிணியின் ஓசையுன்றன் காலில் கேட்கும்;
ஊற்றோசை தேரழுந்தூர் தன்னில் கேட்கும்;
ஒழுகரைசண் முகக்கவிஞன் பாடி வைத்த
ஏற்றப்பாட் டெனுமுழவுப் பாட்டின் ஓசை
எந்நாளும் குற்றாலம் தன்னில் கேட்கும்.

அண்ணாந்த படியிருக்கும் மலையின் ஓரம்
அழகுமயில் நாள்தோறும் நடனமாடும்.
எண்ணாத எண்ணமெலாம் குற்றா லத்தின்
எழிலதனைக் கண்டவுடன் தோன்றும். பெண்ணே!
கண்மீனின் பிரசவந்தான் அழுகை; பண்டைக்
கவிஞர்களின் அச்சந்தான் அவைய டக்கம்;
தண்ணீரின் தனிப்பிரிவே பொய்கை; ஆற்றுத்
தண்ணீரால் உருவான கைதான் வைகை.

"தொடுக்கின்ற கையே உன் மலர்க்கை; உன்னைத்
தொடுகின்ற கையதுவே என்கை;" என்றான்.
"படைக்கின்ற கையதுவே என்கை; என்றன்
படம்வரையும் கையுங்கள் கைகள்;" என்றாள்.
"பிடிக்கின்ற கையதுவே என்கை; அன்பால்
பிணைக்கின்ற கையதுவே உன்கை" என்றான்.
"எடுக்கின்ற கையதுவே என்கை; அள்ளி
எல்லோர்க்கும் வழங்கும்கை உங்கள் செங்கை".

பேர்வாய்ந்த இரட்டையரை ஆத ரித்துப்

பெருங்கீர்த்தி பெற்றானாம் சம்ப ராயன்.

ஊர்வாழ, உலகத்தில் உள்ளோர் வாழ,

ஒப்பற்ற தமிழ்ப்புலவர் குடும்பம் வாழக்

கார்மேகம் வழங்குதல்போல் வழங்கும் தங்கள்

கரம்வாழ்க! என்றுரைத்தாள். அதனைக் கேட்டு,

நீர்நாண நெய்வழங்கும் ஊரில் தோன்றி

நிலம் நாணப் புகழ்பெற்றோன் மகிழ்ச்சி யுற்றான்.

சட்டிநாத பிள்ளைகளாம் பிச்சைக் காரர்

சத்திரத்தில் கதைபேசிக் கொண் டிருக்கக்

கட்டிலுக்குப் பக்கத்தில் சட்ட நாதன்

காரிகையோ டுரையாடிக் கொண்டி ருக்கக்

கொட்டிவைத்த செம்பொன்னை அள்ளி அள்ளிக்

கொடுத்தவனாம் அவ்வள்ளல் இல்லம் நோக்கி

வட்டளத்தூர் ஏருழவன் விரைந்து வந்து

வாசலிலே நின்றபடி "ஐயா!" என்றான்.

சீருடையோன், சிறப்புடையோன், எதையும் நன்கு

சிந்திக்கும் திறனுடையோன், நிழலைத் தேடும்

நீருடையோன் நிலமுடையோன், செம்பொன் மேனி

திறமுடையோன் புகழ்த்துணைவன் இவனே என்னும்

பேருடையோன் விரைந்தாங்கே வெளியில் வந்தான்.

பெரியோனைக் கண்டவுடன் அன்னோன் காலில்

ஏருழவன் வீழ்ந்தெழுந்தான். அவனை நோக்கி

"எதற்கு வந்தாய் சொல்லப்பா?" என்றான் வள்ளல்.

"குண்டலத்தூர் பொற்கொல்லன் தாலி செய்து
கொடுப்பதற்குள் மாரடைப்பால் மாண்டு விட்டான்.
தண்டுகுடி தட்டானோ விடிவ தற்குள்
தாலிசெய்ய இயலாதென் றுரைத்து விட்டான்.
கண்ணகியாம் என்மகட்கு நாளை காலை
கல்யாணம் நடந்தாக வேண்டும் ஐயா!
விண்முகிலைப் போன்றவரே! உம்மை யன்றி
வேறுகதி எனக்கில்லை" என்றான் ஏழை.

நிதிபதியாம் அவனதனைக் கேட்ட வின்னர்
நேரிழையா ளிடத்திலதை எடுத்து ரைத்தான்.
மதுமதிபோல் குளிர்ந்தமுகம் கொண்ட மங்கை
மணாளனிடம் தாலியினைக் கழற்றித் தந்தாள்.
விதைவிதைத்துப் பயிரிடுவோ னிடத்தில், அன்னோன்
விலைமிகுந்த பொற்றாலி யதனைத் தந்தான்.
பொதுவுடமை நிலாவெளிச்சம் புவிமீ தெங்கும்
போய்ப்பரவும் இரவிலவன் பெற்றுச் சென்றான்.

நிலத்தின்கண் புகழ்பரப்பி வந்தோன், மீண்டும்
நேராக மனைவியிடம் வந்து, "கொல்லி
மலைத்தேனே! தாலியைஉன் னிடம்நான் கேட்க
மலைத்தேனே! பெண்மானே!" இங்கெ னக்குன்
தலைவேண்டும் எனினுமதைத் தருவா ளன்றித்
தமிழ்ப்பெண்தன் தாலியினைத் தரவே மாட்டாள்.
மலைச்சாரல் மயிலேநான் கேட்ட போது
மறுக்காமல் நீயதனைக் கழற்றித் தந்தாய்.

மான்பார்த்தல் போலென்னைப் பார்க்கும் மாதே!
மலைநிலத்துச் சந்தனமே! குறிஞ்சிப் பூவே!
நான்வானம்; நீஎனக்கு நிலவு! கண்ணே!
நான்தான்நீ! நீதான் நான்! இதனைக் கேளாய்;
"தான்நீஎன் னும்சொல்லே காலப் போக்கில்
தாலியெனத் திரிபுற்ற தென்கின் றார்கள்.
ஏன்பெண்ணே! நீஎன்ன சொல்லு கின்றாய்?"
எனக் கேட்டான். "இவ்விளக்கம் சரிதான்" என்றாள்.

காலையிலும் மாலையிலும் மற்றும் எந்தக்
காலத்தும் மலர்கின்ற காதற் பூவே!
தாலமென்றும், புல்லென்றும், பெண்ணை என்றும்,
தாளியென்றும் நீள்பனையைச் சொல்வ துண்டு.
தாலமென்னும் ஓலையினால் அந்த நாளில்
தாலிசெய்தார்; மங்கலநூல் வேலி செய்தார்.
மாலையிட்டுப் பனையோலைத் தாலி கட்டும்
வழக்கமிங்கு நெடுங்காலம் இருந்த துண்டு.

ஓலைகொண்டு தாலிகண்ட தமிழர், பின்னர்
ஒன்றினைவிட் டொன்றுபற்றக் கருதி, ஓலைத்
தாலிவிட்டார்; புலிப்பல்லைத் தொங்க விட்டார்;
தங்கத்தைப் பின்வந்தோர் தங்க விட்டார்.
மாலையிட்டான் மாலையிட்டாள் என்ப தோடு
மணப்பந்தல் விழாநிகழ்ச்சி முடிதல் வேண்டும்.
ஏலக்காய் போன்றவளே! என்றான் வள்ளல்.
"என்கருத்தும் இதுவேதான்" என்றாள் வஞ்சி.

# தாயுமானவர் மரபு



சிவசிதம்பரம் (மறைசை)
அட்சயலிங்கர் (சிக்கல்)
அருணாசலர்
கேடிலியப்பர்=கனகவல்லி
அம்புஜவல்லி
காயாரோகணர் (நாகை)
அருளையர்
சிவசிதம்பரர்
தாயுமானவர் = மட்டுவார்குழலி
(திரிசிரபுரம்)
கனகசபாபதி
(திரிசிரபுரம்)

# மதுரை நாயக்க அரசர்களின் கொடிவழி

நாகம நாயக்கன் - 1559

விசுவநாத நாயக்கன்
1599-1563

குமார கிருஷ்ணப்ப நாயக்கன்
1563-1573

கிருஷ்ணப்ப (பெரிய வீரப்ப)
நாயக்கன் 1593 - 1595

விசுவநாத நாயக்கன் II
1573 - 1595

லிங்கய (குமார கிருஷ்ணப்ப
நாயக்கன் 1595 - 1602

விசுவப்பன் என்ற
விசுவநாத நாயக்கன் III
1595 - 1602

முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கன்
1602 - 1609

முத்துவீரப்ப நாயக்கன்
1609 - 1623

திருமலை நாயக்கன்
1623 - 1659

முத்து அழகாத்திரி
1659 - 1662

சொக்கநாத நாய்க்கன்
1662 - 1682

ரெங்க கிருஷ்ண முத்துவீரப்பன்
1682 - 1688

ரெங்ககிருஷ்ண முத்துவீரப்பன் மகனுக்காக அவனுடைய தாயாராகிய மங்கம்மாள்
1689 - 1704

|

ரெங்க கிருஷ்ணமுத்து வீரப்ப நாயக்கன் மகன்)
விஜய்ரங்க சொக்கநாத நாயக்கன்
1704-1731

|

(விஜயரங்க சொக்கநாத நாயக்கன் மனைவி)
மீனாட்சி
1731-1736

# விதவையும் வேதாந்தியும்

;ாடுபுகழ் விஜயரங்க சொக்க நாத

நாயக்கன் அரசாண்டு வந்த நாளில்

பாடவில்லை மக்கள்முகம், மன்னன் செங்கோல்

வளையவில்லை; ஆதலினால் அன்னோன் ஆட்சி

ஆடவில்லை; சிறிதேனும் அசைய வில்லை;

அம்மன்னன் நோயுற்று மாண்ட பின்னர்,

ாடமெல்லாம் விளக்கெரியும் நாட்டை, அன்னோன்

மனையாட்டி மீனாட்சி ஆண்டு வந்தாள்.

ருவத்தை இழக்காமல் தங்கத் தாலி

பாக்கியத்தை இழந்தவளாம் அந்த மங்கை,

இருபத்து நான்குவய துடையாள்; இல்லை

இல்லையெனும் இடையுடையாள்; கரிகாற் சோழன்

ரைரயிட்ட பொன்னிநதி மீன்கள் மெச்சும்

கண்ணுடையாள். ஆசைக்குப் பூசை செய்யும்

ருவத்தாள்; உருக்கியநெய் நிறத்தாள்; காமப்

பசியுடையாள்; பனிபெய்த வயலைப் போன்றாள்.

தானத்தில் நிதானத்தில் சமாதா னத்தில்
தத்துவத்தில் தர்க்கத்தில் கணக்கில், கல்வி
ஞானத்தில் சிறந்தவனாம் எல்லோ ருக்கும்
நல்லவனாம் தமிழ்த்தாயு மான னென்பான்,
வானத்து முகில்சூழ்ந்த நிலவாம் அந்த
மணிமகுடப் பெண்ணரசி அழைப்பை ஏற்றுச்
சேனைக்கோர் ஆணையிடும் அரசாங் கத்தில்
சிறப்புமிகு பெரும்பதவி வகித்து வந்தான்.

அருச்சனையில் பிரச்சினைகள் எழாத காலம்
அக்காலம் என்றாலும், நாட்டில் வேறு
பிரச்சினைகள் தோன்றும்போ தெல்லாம் அந்தப்
பெண்ணரசி அவனைத்தான் அழைத்துக் கேட்பாள்.
நெருக்கடிகள் தீர்வதற்கும், அமைதி ஆங்கே
நிலவுதற்கும் தக்கபல வழிகள் சொல்வான்.
திருத்தமின்றி அவன்கருத்தை ஏற்றுக் கொண்டு
சிற்றிடையாள் அரசியலில் வெற்றி காண்பாள்.

வெற்றிபெறச் செயவல்ல தாயு மானான்
விவேகத்தை அவள்நினைந்து வியப்பாள்: அன்னோன்
சொற்பொழிவைத் தவறாது கேட்டுக் கேட்டுச்
சுவைத்திடுவாள்; அவனியற்றும் கவியி லுள்ள
கற்பனையை மெச்சிடுவாள்: அவனை நேரில்
காணுகின்ற போதெல்லாம் புகழ்ந்து ரைப்பாள்.
தற்பெருமை கொண்டவளோ ஒவ்வோர் நாளும்
தன்னையவன் தழுவுதல்போல் கனவு காண்பாள்.

ானவனை இழந்ததனால் விதவை யாகி
மற்றவர்கள் விரும்பியதால் அரசி யாகிப்
பான்னிநதி நீர்நாட்டை ஆண்டு வந்த
பூவையவள். அவன்மீது மையல் கொண்டு
ானுடைய காமத்தைக் கண்ணில் வைத்தும்
சயனசுகச் சிந்தனையை நெஞ்சில் வைத்தும்
ன்னழகும் பின்னழகும் காட்டி அன்னோன்
முன்னிலையில் முத்துநகை காட்டி வந்தாள்.

நவுற்ற காலத்தில் ஓர்நாள் தீய
கனாக்கண்டு கருச்சிதைவேற் பட்ட தாலே
பருமைக்கோர் பிள்ளையின்றி மாற்றான் வீட்டுப்
பிள்ளையொன்றை வளர்த்தவளாம் அந்த மங்கை
ரைவித்துப் போலும்தன் பல்லைக் காட்டிச்
சுந்தரனை வசப்படுத்த முயன்றா ளேனும்,
புருட்சித்தன் அவளிடத்தில் மயங்க வில்லை.
அதையுணர்ந்தும் அவள்முயற்சி தளர வில்லை.

புன்றொருநாள் நள்ளிரவு நேரம்; விண்ணில்
அழகுநிலா ஊர்ந்துசெல்லும் நேரம்; அந்தப்
பின்னிரவு நேரத்தில் நிலாமுற் றத்தில்
பெண்ணரசி பெருமூச்சு விட்டுக் கொண்டே
ன்னர்களின் நன்மதிப்பைப் பெற்ற தாயு
மானவனை அப்போது நினைத்தாள். பின்னர்
அன்னவனை உடனழைத்து வருக என்றே
ஆணையிட்டாள். பணியாட்கள் விரைந்து சென்றார்.

செங்கதிரெப் போதுதிக்கும் கிழக்கே என்று
சேவலொன்று தன்முக்கைத் தரையில் ஊன்றி
அங்கதுவே நினைவாக இரவுப் போதில்
அப்படியே இருப்பதுபோல் அவனைக் காண
மங்கையவள் அரண்மனையில் காத்தி ருந்தாள்.
மனத்துக்கண் மாசில்லான் வந்து சேர்ந்தான்.
இங்கிருந்தால் இடையூறு வருமென் றெண்ணி
இளையவனை வேறிடத்திற் கழைத்துச் சென்றாள்.

சென்றவுடன் ஆங்கவனோர் புறத்தில் நின்றான்
சிற்றிடையாள் அவனருகே வந்து நின்றாள்.
வென்றுவென்று பெரும்புகழைச் சேர்க்கும் வேந்தர்
வெண்கொற்றக் குடைபோன்ற நிலவை நோக்கி
நன்றிசொல்ல வேண்டுமிந்த நிலவுக் கென்றாள்.
நாற்கவியும் பாடவல்லோன் அவளை நோக்கிக்
குன்றுதொடும் வெண்ணிலவில் உலக மக்கள்
குடியேறும் நாள்வரினும் வரலா மென்றான்.

மூடுபனி விதவையவள் அவனை நோக்கி
முழுநிலவை அடிக்கடி நான் பார்ப்பேன் என்றாள்.
ஆடுமயில், பாடுகுயில் இவற்றை நீங்கள்
அன்றாடம் பார்ப்பதுபோல்; சிறந்த செய்யுள்
ஏடுகளை அவ்வாறு தாங்கள் பார்த்தால்
இலக்கியங்கள் உருவாகும். அவ்வப் போது
நாடுநகர் எல்லைமுத லான வற்றை
நாடாள்வோர் பார்வையிட்டால் குறைகள் தீரும்.

வாதமிட்டு நாள்கழிக்கும் அரசாங் கத்தில்
வன்முறைதான் அதிகரிக்கும்; வந்தோர்க் கெல்லாம்
சாதமிட்டுக் கணக்கெழுதும் மடங்கள்; சாதிச்
சண்டையிட்டு நாள்கழிக்கும் மக்கள் கூட்டம்.
மாதமிட்டும் தேதியிட்டும் பிறர்பால் சென்று
மண்டியிட்டும் கெஞ்சுபவர் மிகுந்தால், ராமர்
பாதமிட்ட இடந்தோறும் கோயி லன்றிப்
பகுத்தறிவுச் சாலைகளா நாட்டில் தோன்றும்?

மாடுகட்டிப் போரடித்தால் மாளா தென்றே
மலைநிகர்த்த யானைகட்டிப் போர டிக்கும்
நாடிதுவே எனப்புகழ்ந்து பேசிக் கொண்டே
நாமிருந்து பயனில்லை. ஏழை கட்கு
வீடுகட்டித் தரவேண்டும்; கல்விக் கூடம்
வீதிதொறும் தோன்றிடுதல் வேண்டு மென்றான்.
ஏடுடைய மாமலரைப் போன்ற மங்கை
இவையனைத்தும் விரைவில்நிறை வேறு மென்றாள்.

வளைவுபடும் புருவங்கள் கண்ணைச் சுற்றி
வளர்ந்தாலும் ஒருவேளை வளரக் கூடும்.
பிளவுபடும் கட்சிகளால் நாட்டில் தோன்றும்
பிரச்சினைகள் ஒருபோதும் தீரா தென்றான்.
அளவுபடும் இளம்பருவம் மாறி விட்டால்
அப்பருவும் மறுபடியும் வாரா தென்றாள்.
களவுபடும் செம்பொன்னும் மணியும் முத்தும்
கல்வியைப்போல் தனிப்பெருமை தாரா தென்றான்.

அதுவாக வருவதுதான் அதிர்ஷ்டம் என்பர்

அதிலெனக்கு நம்பிக்கை சிறிது மில்லை.

பொதுவாக எல்லோர்க்கும் செல்வம் வேண்டும்.

புகழ்வேண்டும்! புகழொன்றே நிலைக்கு மென்றாள்.

மதிப்புள்ள பாராட்டும், புகழும், பேரும்,

மக்கள்வெளிப் படுத்துகின்ற வாய்க்காற் றாகும்.

எதற்கிந்தப் பாராட்டும், புகழும், பேரும்,

எனக்கிவற்றில் நம்பிக்கை இல்லை என்றான்.

சிகை நீண்ட வேதாந்தி அவளை நோக்கிச்

சீர்சிறப்போ டரசாண்ட நமது மன்னர்

பகைநீண்ட நேரத்தில் படையெ டுத்தும்,

பசிநீண்ட நேரத்தில் உணவளித்தும்,

தொகைநீண்ட நேரத்தில் பரிசளித்தும்,

துயர்துடைத்தார் என்றுரைத்தான், அதனைக் கேட்டு,

மிகநீண்ட மூக்கமைந்த விதவைப் பெண்ணாம்

மீனாட்சி பெருமூச்சு மட்டும் விட்டாள்.

வாயிலிட்டால் இனிக்கின்ற தேனும் பாலும்

வயிற்றுக்குச் சென்றவுடன் புளிக்கும் என்றான்.

தூயதமிழ் அவ்வாறு புளிப்ப துண்டோ

சொல்லுங்கள் எனக் கேட்டாள் அந்த மங்கை.

ஆயகலை அறுபத்து நான்கும் கற்றோன்

அடங்காத புகழ்பெற்றோன் அவளை நோக்கிக்

காயகற்பம் போன்றதமிழ் கற்றோர், எட்டிக்

காயதனைத் தின்றாலும் இனிக்கும் என்றான்.

திருச்சியிலே நெல்விளைச்சல் அதிகம்; கம்பர்
செய்யுளிலே சொல்விளைச்சல் அதிகம் என்றாள்.
திருச்சியிலே ஆலயங்கள் அதிகம்; அப்பர்
தேவாரம் நான்விரும்பும் பதிகம் என்றான்.
திருச்சியில்ராப் பள்ளிகளும் அதிகம், மன்னன்
சேதுபதி தொல்லைகளும் அதிக மென்றாள்.
உருள்பெருந்தேர்க் கச்சாணி போன்ற வீரர்
உள்ளவரை நமக்கச்ச மில்லை என்றான்.

ஆசைக்கோர் அளவில்லை என்றாள். ஆமாம்
அரசர்களும் அமைச்சர்களும் இதனை நன்கு
யோசிக்க வேண்டுமென்று துறவி சொன்னான்.
யோகியரே எனினும்தாம் பிறந்த நாட்டை
நேசிக்க வேண்டுமென்றாள். என்னிடத்தில்
நீசிக்க வேண்டுமென நினைப்பார் தம்மைத்
தூசிக்க வேண்டுமென்றான். இதுபோல் சொல்லித்
தோற்றவர்கள் இந்நாட்டில் பலருண் டென்றாள்.

இங்கிருந்து பார்த்தாலே திருவ ரங்கத்
தெம்பெருமாள் திருக்கோயில் தெரியு மென்றாள்.
இங்கிருந்து பார்ப்பவர்க்கு மட்டுந் தானே
எம்பெருமாள் திருக்கோயில் தெரியும். ஆனால்
எங்கிருந்து பார்த்தாலும் நீல வானம்
எல்லோர்க்கும் நன்றாகத் தெரியு மென்றான்.
அங்கிருக்கும் முழுநிலவைப் பாரீர் என்றாள்.
அடிக்கடிநான் அதைப்பார்ப்ப தில்லை என்றான்.

எங்கிருந்தோ வருகிறது தென்றல் என்றாள்.

என்னைத்தான் சுடுகிறது திங்கள் என்றாள்.

தங்களையேன் சுடவேண்டும் என்று கேட்டான்.

தனித்திருந்தால் சுடத்தானே செய்யும் என்றாள்.

செங்கரும்பு தித்திக்கும் எனத்தெ ரிந்தும்

சிலரதனை விரும்புவதே இல்லை என்றாள்.

தங்கமலர்த் தாமரையில் தேனி ருந்தும்

தவளையதை உண்ணுதற்கு விரும்பா தென்றான்.

கவிஞானச் சுடர்விளக்கின் ஒளியாம் அன்னோன்

கரத்திலொரு சாத்திரநூல் இருத்தல் கண்டு,

சுவைஞானச் சுவடிகளைப் பயின்று காதல்

தூதுவிடும் இவ்விளமைப் பருவம் தன்னில்

சிவஞான போதத்தின் வழிநூ லான

சிவஞான சித்தியார் தேவைதானா?

புவிஞானம் பெறத்தக்க நூலா இந்நூல்?

பூவிருக்கும் போதுபுல்லை எடுக்க லாமோ?

முப்பாலில் முதற்பாலாம் அறத்துப் பாலை

முன்பொருநாள் தெலுங்கில் மொழிபெயர்த்துத் தந்தீர்

அப்பால்நான் பொருட்பாலை விரும்பிக் கேட்டேன்

அதனையும்நீர் களிதெலுங்கில் வடித்துத் தந்தீர்.

இப்போது காமத்துப் பாலை நாமிங்

கிருவருமே மொழிபெயர்ப்போம் என்று ரைத்தாள்.

கைப்பான துவர்ப்பான கார மான

கரிப்பான மொழிகேட்டுத் திகைக்க லானான்.

அம்மைநோய் கண்டதனால் மன்னர் மாண்டார்.
அந்நோயால் பலர்நமது நாட்டில் மாண்டார்.
நம்நாட்டில் இனிஇந்நோய் பரவா வண்ணம்
நாமிதனைத் தடுத்தாக வேண்டு மென்றான்.
அம்மைநோய் மிகக்கொடிய நோயென் றாலும்
அதனைவிட நம்நாட்டில் கொடிய தான
கைம்மைநோ யுற்றிங்கு வருந்தும் பெண்டிர்
கடைத்தேற ஏதேனும் வழிசொல் லுங்கள்.

பொருள்விலகி இருக்குமெனில் வறுமை வந்து
புகுந்துவிடும் என்பதுண்மை; காலில் உள்ள
விரல்விலகி இருக்குமெனில் விதவை யாகி
விடுவாளென் றுரைப்பதைநான் ஏற்க மாட்டேன்
அருள்விலகிப் போய்விடினும் மீண்டும் வாழ்வில்
அதைப்பெறலாம் என்கின்றார்; விதவைக் கிங்கே
இருள்விலக வழியில்லை ஆண்கள் மட்டும்
இதற்கு விதிவிலக்காக வாழ்கின் றார்கள்.

அக்காலப் பெண்ணொருத்தி விதவை யாயின்
அவ்விதவை புல்லரிசி சமைத்துண் பாளாம்;
பக்கத்தில் பாயிருந்தும் தரையின் மீதே
பாவையவள் படுப்பாளாம்; விதவை என்ன
வைக்கோலா? பயனற்ற புகையா? தண்ணீர்
வற்றிப்போய் விட்டதொரு குளமா? வீட்டில்
தக்கோலம் அவ்விதவை தின்றாள் என்ன?
சாதத்தில் நெய்யூற்றிக் கொண்டா லென்ன?

தேரிலுள்ள சக்கரங்கள் மற்றோர் பக்கம்
திரும்புதல்போல் அவள்திரும்பி, அவனை நோக்கி
ஊரிலுள்ள நிலமதனை அளந்த கோலை
உலகளந்த கோலென்று சொல்வர். இங்கே,
நேரிலுங்கள் பேரழகை அளக்கும் கண்ணை
நீலமணிக் கோலென்று சொன்னால் என்ன?
பாரிலுள்ள செல்வத்தால் பசியா தீரும்?
பாருங்கள் வாருங்கள் அருகில் என்றாள்.

ஆர்த்தெழுந்து முன்னேறும் அலையைப்போன்றாள்
அருள்தாயு மானவனை நோக்கிப், பொன்னால்
வார்த்தமுகம் திருவரங்கப் பெருமாள் கோயில்
வாசலிலே உள்ளமுகம், ஊடிக் கூடி
வேர்த்தமுகம் எனதுமுகம் எனினும் இந்த
விதவைமுகம் அழகுமுகம்; முன்பே நீங்கள்
பார்த்தமுகம் இந்தமுகம்; விதவை என்னும்
பழம்பொருள்நான் எனினுமிளம் பொருள்நா னன்றோ?

காய்ந்துலர்ந்த வெற்றிலையைத் தரினும், மக்கள் கைநீட்டி
அதைவாங்க மறுப்ப தில்லை.
பாய்ந்தோடும் கலைமானின் காது போன்ற
பச்சையிளம் வெற்றிலையா யிற்றே நான்தான்
வாய்சிவந்தே இருந்தாலும், தாம்பூ லத்தால்
வாய்சிவக்கக் கூடாதா? உங்கள் பக்கம்
சாய்ந்திருக்கும் இம்மரத்தில் ஏறி ஓடத்
தயங்குவதேன்? இவ்வாறு தயங்க லாமா?

விருத்தியுரை சொல்லுமென்றன் விழியி லுள்ள
விண்ணப்பம் படியுங்கள்; இயற்கை நன்கு
சுருக்கிவைத்த சிற்றிடையைத் தொட்டுத் தொட்டுச்
சுற்றளவு பாருங்கள்! சுகந்தா ருங்கள்.
நெருக்கிவைத்து நிறம்வைத்து நெளிய வைத்து
நீட்டிவைத்துக் கூட்டிவைத்த கூந்தல் மீது
பொருத்தமுள்ள மலரெதுவோ அதனைச் சூட்டிப்
போராடும் கீழ்க்கடலில் நீரா டுங்கள்.

ஒருகொடியில் நான்குவகைக் கனிகள் இந்த
உலகத்தில் எங்குமில்லை எனினும் என்றன்
அருகினிலே வாருங்கள்; அழகு தூங்கும்
அதரத்தில் செங்கோவைக் கனிபா ருங்கள்;
குருத்துப்பல் வரிசையில்மா துளைபா ருங்கள்;
குதிகாலில் நல்லத்திப் பழம்பா ருங்கள்;
நிருவாண மாக்குங்கள் என்றன் மார்பில்
நிச்சயமாய் இருவில்வப் பழங்கி டைக்கும்.

தீராத பசிக்காக நாமெல் லோரும்
தினந்தோறும் உண்ணுகின்றோம் அன்றோ? வாழ்வில்
பேராசை கொள்ளுமிந்தப் பருவம் தன்னில்
பேசாமல் இருந்திடவா முடியும்? நான்போய்ச்
சேராத இடந்தனிலே சேர்ந்தா லன்றோ
தீதுவரும்? எனக்கும்மால் வருமா? ஆற்றின்
நீரோடு நீர்கலக்க வேண்டு மென்று
நினைப்பதிலே தவறென்ன? குற்றமென்ன?

முன்பக்கம் மூக்குத்திப் பூக்கள், வண்டின்
முதலிரவை மறைந்திருந்து பார்க்கும் ஈக்கள்,
பின்பக்கம் மலைச்சாரல் மயிலின் ஆட்டம்,
பிறவியிலே கண்சிவந்த குயிலின் கூட்டம்,
என்தலைக்கு மேல்நெருப்பு நிலவின் ஓட்டம்,
இளந்தென்றல் ஓடிவந்து செயுமார்ப் பாட்டம்,
என்செய்வேன் இவையனைத்தும் ஒன்று கூடி
எனையெதிர்த்தால் இளம்விதவை என்ன செய்வேன்?

பாடாத குயிலுக்கு மகிழ்ச்சி யுண்டோ?
படராத பூங்கொடிக்கு வளர்ச்சி யுண்டோ?
ஓடாத நீருக்கு வேக முண்டோ?
உலவாத தென்றலுக்கு வரவேற் புண்டோ?
சூடாத மலருக்குப் பெருமை யுண்டோ?
துள்ளாத மீனுக்கு வாழ்க்கை உண்டோ?
தேடாத பொருளுக்கும், ஆணும் பெண்ணும்
சேராத வாழ்வுக்கும் வளர்ச்சி யுண்டோ?

நதிச்சார்பே இல்லாத நாட்டை யாரும்
நலங்கொழிக்கும் நாடென்று சொல்வ தில்லை.
விதைச்சார்பே இல்லாமல்மரங்கள் தோன்றி
விடுவதில்லை. இவ்வுலகில் யாரும் ஆண்பெண்
சதைச்சார்பே இல்லாமல் பிறப்ப தில்லை.
சயனசுகம் முனிவரையும் விடுவ தில்லை.
கதைச்சார்பும் கற்பனையும் துணையு மின்றிக்
காவியங்கள் உருவாக வழியே இல்லை!

கொட்டைகட்டும் சைவத்தை நம்பிக் கொண்டு
கோதையரின் இன்பத்தைக் குறைகூ றாதீர்;
கொட்டாவிக் கொருநாளும் பெருமை யில்லை
கொஞ்சாத வாழ்வுக்கும் பெருமை இல்லை.
வெட்டத்தான் பட்டாளக் கத்தி; செந்நெல்
விதைக்கத்தான் வரப்புயர்ந்த வயல்கள்; மாந்தர்
கட்டத்தான் பட்டாடை; கரும்பும் தேனும்
கற்கண்டும் கனிவகையும் தின்னத் தானே?

பரபக்கம் சுபக்கமென்று பேசிக் கொண்டே
பருவத்தைப் பாழாக்கி வருகின்றீர்கள்.
இருபக்கம் இறகுடைய பறவை வானில்
எப்பக்கம் பறந்திட்டால் என்ன? தங்கள்
குருபக்கம் திருமூலர் இருந்தார். இந்தக்
கோதையுங்கள் பக்கத்தில் இருந்தால் என்ன?
ஒருபக்கம் நமக்கேற்ற மஞ்சம்; தாங்கள்
ஒத்துழைத்தால் இன்பத்திற் கேது பஞ்சம்?

ஒட்டடையான் எனும்நெல்லின் பெயரை மாற்றி
உங்கள்பெயர் அதற்கிடுவேன்; எனது காலப்
பெட்டகத்தில் உங்கள்வர லாற்றைப் சேர்க்கப்
பெரிதும்நான் விரும்புகின்றேன். யோக மென்னும்
நிட்டையிலே காணாத சுகத்தை, இன்ப
நித்திரையில் கண்டிடலாம். மேலும் உங்கள்
கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பேன். என்னைக்
கட்டியணைத் தாலதுவே எனக்குப் போதும்.

அவரிருந்தார் அவர்மீட்டும் வீணை யானேன்.
அவர்மறைந்தார் அன்றுமுதல் விதவை யானேன்.
சுவரின்றிச் சித்திரமா எழுதக் கூடும்?
சொல்லுங்கள் நாடுவிட்டுக் காடு சென்று
தவஞ்செய்ய வேண்டுமெனில் ஒருவர் போதும்;
சயனசுகத் திற்கிருவர் வேண்டு மன்றோ?
கவியரசே! நானுங்கள் அடிமை! இந்தக்
கட்டிலுக்கு வாருங்கள்! எனைச்சே ருங்கள்.

ஈயாத மாந்தர்பொருள் தேய்தல் போன்ற
இடையுடையாள் எனைநீங்கள் வெறுக்க லாமா?
காயாநான்? பருகுதற்குப் பயன்ப டாத
கடலாநான்? கலிங்கத்துப் பரணி கூறும்
பேயாநான்? களிதெலுங்கு நாட்டில் வாழ்ந்த
பெருங்கவியாம் நன்னயரை வருத்தி வந்த
நோயாநான் சொல்லுங்கள்? வஞ்சி என்றன்
நோக்கத்தை இப்போதே நிறைவேற் றுங்கள்

மழைபொழியும் மேகங்கள் வந்து தங்கும்
மாடத்தின் உப்புறத்தில் ஒவ்வோர் நாளும்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னாம்? அந்தோ
இருட்டறைக்குள் ஓவியம்போல் இருக்கின் றேன்நான்.
விழுந்தபொருள் விதையென்றால் முளைத்தால் என்ன?
விளைந்தபொருள் கனியென்றால் தின்றால் என்ன?
எழுவாய்நீ பயனிலைநான் என்கின் றீர்கள்
என்றுசெயப் படுபொருள்நான் ஆவேன் சொல்வீர்?

கோயிலுக்குத் தாழம்பூ உதவா தென்றால்
கூந்தலுக்கும் உதவாதா? உதவு மன்றோ?
வாயிலுக்கோர் தோரணத்தை எதிர்பார்க் கின்றேன்.
மறுபடியும் புதுவாழ்வை எதிர்பார்க் கின்றேன்.
காயமிது பொய்யென்று சொல்கின் றீர்கள்
காற்றடைத்த பையென்று சொல்கின் றீர்கள்
ஈயமதை என்செவியில் ஊற்று தற்கோ
ஏந்திழைநான் உங்களையிங் கழைத்து வந்தேன்?

நின்றுநிலை பெறத்தக்க பாக்கள் பாடி
நிமிர்ந்தபுகழ் பெற்றவரே! தங்கள் தங்கள்
தன்னலத்தைக் கருதித்தான் உலகில் யாரும்
தவறுபல செய்கின்றார். மாலை யிட்ட
மன்னனுக்கு நான்மனைவி என்ற போதும்
மற்றவர்போல் நானுமொரு மங்கை தானே?
துன்மதியாண் டிற்பிறந்த பெண்ணாம் என்னைத்
துந்துபி விகாரியென வெறுத்தி டாதீர்.

ஊர்முழுதும் தீப்பற்றி எரியு மாயின்
உடனேபோய் அவ்வூரின் அருகி ருக்கும்
ஓர்குளத்தில் மூழ்குவதன் மூலம், ஊரில்
உள்ளவர்கள் தப்பித்துக் கொள்ளக் கூடும்.
நீர்க்கடலுக் கடியில்நாம் இருந்திட் டாலும்
நிச்சயமாய் நமைக்காமம் சுடுமே! மற்றும்,
ஊர்ப்புறத்தே உள்ளவொரு மலைக்குப் பின்னால்
ஒளிந்தாலும் விடுவதுண்டோ காம வெப்பம்?

கொஞ்சுதற்கும் காதலர்கள் கூடு தற்கும்
குறிஞ்சிநிலம் உரியதென்பர். சோழன் ஆண்ட
தஞ்சையில்தான் மலையில்லை என்றால், இந்தத்
தலைநகராம் திருச்சியிலே மலையா இல்லை.
மஞ்சத்தில் முகவுரையை தொடங்கி ஈங்கோய்
மலைமறைவில் முடிவுரையை முடிப்போம் என்றாள்.
அஞ்செழுத்து மந்திரத்தை உச்ச ரிப்போன்
ஆரணங்காம் அன்னவளை உற்று நோக்கிச்

சூதெல்லாம் உன்னுடைய சொந்த மென்றும்,
சுயநலமே உன்னுடைய நோக்க மென்றும்,
ஈதெல்லாம் உனதுசதித் திட்ட மென்றும்
இப்போது புரிந்துகொண்டேன். என்னைக் காணும்
போதெல்லாம் சிரித்தாயே இதற்குத் தானா?
போகமெனும் தாகவிடாய் தீர்க்கத் தானா?
காதெல்லாம் சுடுகின்றதுன் வார்த்தை! உன்னைக்
கற்பரசி என்றன்றோ நினைத்தி ருந்தேன்.

பூனைக்கும் மானமுண்டாம்; பறந்து சென்று
பூநக்கும் வண்டுக்கும் மான முண்டாம்!
மானுக்கும் மானமுண்டாம்: உனக்கோ, அந்த
மான்பார்வை உண்டன்றி மான மில்லை.
வானத்து வெண்ணிலவு களங்கத் தோடு
வாழ்வதுபோல் பெண்ணொருத்தி வாழலாமா?
ஆனந்தக் களிப்பென்னும் பாடல் பாடும்
ஆரணங்கே கற்பென்னும் திண்மை எங்கே?

அகந்தைகொண்ட ஓர்விதவை. காஷ்மீ ரத்தை
ஆண்டுவந்தாள். அனைவரையும் அதட்டி வந்தாள்.
சுகந்தையெனும் அவ்விதவை அமைச்ச னோடு
தொடர்புகொண்டு நடத்தைகெட்டு நாச மானாள்.
அகந்தைகொண்ட மற்றொருத்தி அனலை என்பாள்
அந்நாளில் இலங்கைதனை ஆண்டு வந்தாள்
புகழ்வளர்க்க வேண்டியவள் ஒழுங்கங் கெட்டுப்
போனதனால் தீக்குழியில் தள்ளப் பட்டாள்.

குற்றுகரம் தமிழ்மொழியில் தோன்றா முன்பே
குடிபெயர்ந்தோர் மரபில் வந்த தெலுங்குப் பெண்ணே!
சற்றிதனை உற்றுக்கேள்! மறைந்த மன்னன்
தாரம்நீ! இந்நாட்டின் தாய்நீ! நீயோ
அற்பசுகம் பெறவேண்டி என்னை இங்கே
அழைத்துவர ஆள்விடுத்தாய். காற்ற டித்தால்
நெற்பயிர் தான் அசைந்திடுமே யன்றி, அந்த
நெற்பயிருக் குரியவயல் அசைவ தில்லை.

எட்டியெட்டி இருக்கும்விண் மீன்கள் போலே
எப்பொழுதும் இருப்பதற்கு முயலும் என்னை
ஒட்டிஒட்டி உறவாட அழைக்கின் றாய்நீ
ஓயாமல் தொந்தரவு செய்கின் றாய்நீ
விட்டுவிட்டுக் குயில்கூவும் பருவம் வந்து
விட்டதென்று நினைவூட்டி அருகில் நின்று
மொட்டுமொட்டாய்ச் சிரித்தாலும் மயங்க மாட்டேன்.
மூங்கிலிலை மேற்பனிபோல் தூங்க மாட்டேன்.

வான்கவிந்த வையகத்தில் பொய்யும் மெய்யும்
வழக்காடும் உலகத்தில் கருவுற் றிங்கே
ஏன்பிறந்தேன் என்றெண்ணி வருந்தும் என்னை
எதற்காக, வற்புறுத்து கின்றாய்? இன்பத்
தேன்பருகத் துடிப்பவளே! கீழ்வாய்ப் பற்கள்
சிரிப்பதற்குப் பயன்படுமா? சிந்தித் துப்பார்!
நான்துறவி? நான்யோகி என்று கூறி,
நள்ளிரவில் அவ்விடத்தை விட்டெழுந்தான்.

பாளையினால் இளநீரை மறைத்திட் டாலும்
பச்சிளநீர் சரியாக மறைவ தில்லை.
மாளிகையின் மாதரசி அவ்வா றாக
மார்பகத்தை மறைக்காமல் நெருங்கி நின்று
காளையிடம் மீண்டுமவள் வேண்ட லானாள்.
கற்றவனோ வெறுத்தபடி ஒதுங்க லானான்.
ஆளனில்லா விதவையவள் விளக்கை ஆங்கே
அணைத்திட்டாள். அவளிருந்தாள் அவனைக் காணோம்.

# கண்ணீர் நதி

மடம்பார்ப்பர் சிலரிங்கே; சாதி பேத
மதம்பார்ப்பர் சிலரிங்கே; பதுங்கு தற்கோர்
இடம்பார்ப்பர் சிலரிங்கே; விளம்ப ரத்தை
எதிர்பார்ப்பர் சிலரிங்கே; கவர்ச்சி மிக்க
படம்பார்ப்பர் சிலரிங்கே; பர்வேஸ் என்னும்
பாரசிக மன்னவனோ புடவை போர்த்த
குடம் பார்ப்பான்; குமரிகளைத் தொட்டுப் பார்ப்பான்.
கொக்கோக மேடுகளைக் கூர்ந்து பார்ப்பான்.

நீர்கொண்ட கருங்கடலைக் கவிஞன் பார்த்தால்,
நிதியிருக்கும் பெட்டகத்தை பர்வேஸ் பார்ப்பான்.
சீர்கொண்ட நேர்வழியில் செல்ல மாட்டான்.
சிந்தனையை மனந்திறந்து சொல்ல மாட்டான்.
கூர்கொண்ட முள்மலரைத் தீண்ட மாட்டான்.
கோபத்தை விரைவிலவன் அடக்க மாட்டான்
பேர்கொண்ட மன்னவனாம் குஸ்ரு பர்வேஸ்
பெண்களென்றால் விடமாட்டான்! விடவே மாட்டான்.

அரசாங்கப் பெண்களொடும் ஒவ்வோர் நாளும்
அவன்விரும்பும் பெண்களொடும் பழகும் போதில்
ஒருமுற்றம் நிலாமுற்றம் போது மென்பான்.
ஒருமுத்தம் நீகொடுத்தால் போதா தென்பான்.
இருமுத்தம் கொடுத்தாலும் மேலும் அன்னோன்
இருநூறு முத்தங்கள் வேண்டு மென்பான்.
சரியென்றே அவ்வாறு தரினும் அந்தச்
சதைவெறியன் எனக்கின்னும் வேண்டுமென்பான்.

மீன்மயங்கும் நள்ளிரவில் பெண்டி ரோடு
விருந்துண்டு மஞ்சத்தில் கொஞ்சிப் பேசி
நான்குதொடை நாடகங்கள் நடத்தி வந்த
நாயகனாம் அவ்வேந்தன் அறையில், முன்பே
தேன்மதுரப் பெண்டிர்பலர் இருந்தும், ஆங்கே
ஷெரினென்பாள் அழைத்துவரப் பட்டாள் ஓர்நாள்.
வான்நிலவு போன்றவளாம் அவளை அன்னோன்
வற்புறுத்தி மாளிகையில் வைத்துக் கொண்டான்.

வரம்பிருக்கும் அரண்மனையில் அவளி ருந்தாள்.
வாளிருக்கும் அறையிலவள் உறங்கி வந்தாள்.
இரும்பிருக்கும் நெஞ்சுடைய வேந்தன் வந்தால்
இரவிருக்கும் வரையிலவள் ஈர மாவாள்.
அரும்பிருக்கும் தோட்டத்தில் ஒருநாள் மாலை
அந்தியிலே அவள்நின்று கொண்டி ருந்தாள்.
கரும்பிருக்கும் உயரமுள்ள பர்ஹத் என்பான்
கட்டழகி தனைக்கண்டு மையல் கொண்டான்.

அங்குமிங்கும் பார்க்காமல் அவளைப் பார்த்தான்
ஆரணங்கும் அவ்வாறே அவனைப் பார்த்தாள்
மங்கையவள் கண்ணுக்குள் அவனி ருந்தான்.
வாலிபனின் கண்ணுக்குள் அவளிருந்தாள்.
இங்கிருந்தால் பிறர்காண நேரு மென்றாள்.
இருட்டுக்குள் நாமிருந்தால் தெரியா தென்றான்.
அங்கிருப்பேன் வாருங்கள் நாளை என்றாள்.
அவன் சென்றான். அதற்குப்பின் அவளும் சென்றாள்.

அரசனுக்கே அவள்சொந்தம். அவளை மற்றோர்
ஆண்பிள்ளை பார்ப்பதுவும் குற்ற மாகும்.
தரிசனமே குற்றமெனில், அவர்கள் ஆங்கே
சந்தித்து வருவதனை வேந்தன் பார்த்தால்
இருவருக்கும் மரணந்தான் அடுத்த கட்டம்.
என்றாலும் சந்திப்பர். அவனுக் கென்றே
அரைத்துவைத்த சந்தனமங் கிருந்தும், அன்னோன்
அதைப்பூசிக் கொள்வதற்கே முடிவ தில்லை.

உப்பரிகை மீதிலவள் வந்து நின்றே
ஒற்றைநிலா முகங்காட்டிச் சிரிப்பாள். பெண்ணே!
இப்படிவா என்றழைப்பான். ஆசை அச்சம்
இரண்டுக்கும் நடுவிலவள் துடிப்பாள். நெஞ்சின்
வெப்பநிலை மேலோங்கிப் பெருமூச் சாக
வெளியிலது வரும்போதும் இன்பக் காதல்
தெப்பவிழா நடப்பதில்லை; எதனா லென்றால்
தேனுக்கும் உதட்டுக்கும் நீண்ட தூரம்.

கருங்குழலை அவள்தொங்க விடுவாள்! அந்தக்
கட்டழகன் அதைத்தொட்டு மகிழ்வான். பெண்ணின்
அருவிநிகர் மேலாடை கீழே தொங்கும். அதனையவன்
தன்முகத்தில் ஒற்றிக் கொள்வான்.
பருவமங்கை கீழிறங்க முயல்வாள். ஆங்கே
பணிப்பெண்டிர் குரல் கேட்கும்; நடுங்கி நிற்பாள்.
திரைவிலகும்; இருவரது நெஞ்சும் கொஞ்சும்.
தினந்தோறும் ஏக்கந்தான் முடிவில் மிஞ்சும்.

என்னருமைக் காதலியே! நீயும் நானும்
எதிர்பார்க்கும் இன்பத்தைப் பெறுதற் கிங்கே
பன்னிரண்டு வாரங்க ளாக வெள்ளைப்
பால்நிலவில் காத்திருந்தும் கிடைக்க வில்லை.
இன்றிரவு நானுன்னைத் தொட்டா லன்றி
என்கரங்கள் உன்மீது பட்டா லன்றி
என்னுடலும் உன்னுடலும் சேர்ந்தா லன்றி
என்வாழ்வு மலராது பெண்ணே என்பான்.

தூண்போன்ற மந்திரியும், மாந்தர் தம்மைத்
துன்புறுத்தும் மன்னவனும் மற்றுள் ளோரும்,
வீண்வேட மிட்டிரவில் ஆடிப் பாடி
விளையாடும் அரண்மனையை விட்டு, நீயோர்
ஆண்வேடம் தரித்தேனும் இப்போ தென்றன்
அருகில்வரக் கூடாதா பெண்ணே! என்பான்.
தீண்டாத காதலராய் இருந்து கொண்டே
தினந்தோறும் இளைக்கின்றோம் என்பாள் மங்கை.

ஷெரின் பர்ஹத் சந்திப்பை ஒற்றர் ஓர்நாள்

தெரிவிக்க, வேந்தனவன் வெகுண் டெழுந்தான்.

அரங்கத்தில் அமர்ந்திருந்த முதல மைச்சன்

ஆர்த்தெழுந்த மன்னவனை நோக்கிக் காதல்

விருந்துண்ணத் துடிப்பவனாம் அவனை வாளால்

வெட்டுவது கோபத்தின் பழைய வேலை.

மரணத்தை விளைவிக்கப் போர்வாள் வேண்டாம்;

வஞ்சகத்தால் அவன் வாழ்வை முடிப்போம்; என்றான்.

எட்டடுக்கு மாளிகையில் வாழ்ந்த மன்னன்

எதிர்நின்ற மந்திரியை உற்று நோக்கி;

ஒட்டகத்தின் வெண்ணெயதைப் பூசிக் கொண்டால்

உடலழகு மேலோங்கும் என்ற றிந்து

கட்டுடலில் அதையெடுத்துப் பூசிக் கொண்டு

கண்காட்டிக் காய்காட்டிக் கனிகள் காட்டிப்

பொட்டலத்து மார்பகத்தைத் திறந்து காட்டிப்

புண்தானம் செய்தவளை நம்பிக் கெட்டேன்.

வாழ்கமன்னா எனவாழ்த்திக் கொண்டே என்னை

வஞ்சித்து விட்டாளே மோசக் காரி!

ஆழ்கடல்சூழ் உலகமகா கவிஞர் கோமான்

ஆதிபி ஸபீரென்பான், ஆக்ஸஸ் ஆற்றில் மூழ்கடிக்கப்

பட்டானே அதுபோல், என்னை

முழுமோசம் செய்தவளும் ஆற்று நீரில் மூழ்கடிக்கப்

படவேண்டும் என்றான் மன்னன்.

முதலமைச்சன் சிரித்தபடி அவனை நோக்கி,

நாடாண்டு வருபவர்கள் ஒழுக்கங் கெட்டு
நள்ளிரவில் பெண்மோப்பம் பிடித்து வந்தால்,
ஆடாத நல்லரசும் ஆடிப் போகும்.
அவமதிப்பும் உண்டாகும். ஆசா பாசம்
கூடாதென் றுரைத்தும்நீ கேட்டி டாமல்
குளிர்காய்ந்து கொண்டிருந்தாய். காசுக் காக
ஓடோடி வந்திருக்கும் அவளி டத்தில்
ஒழுக்கத்தை நீயிப்போ தெதிர்பார்க் கின்றாய்.

ஏற்றபடி புன்சிரிப்பைக் காட்டி உன்னை
ஏமாற்றிக் கொண்டிருக்கும் அவளை, ஈரச்
சேற்றதனில் புதைத்திட்ட போதும் அந்தச்
சேற்றுக்கும் மாசுவரும். நமது நாட்டின்
மேற்கிலுள்ள கானகத்தில் அவளைக் கொன்றால்
விலங்குகளும் தவறாகக் கருதும்! ஓடும்
ஆற்றதனில் அன்னவளை மூழ்க டித்தால்
அச்செய்தி நாடெங்கும் பரவக் கூடும்.

நடித்துக் கொண் டிருக்கின்ற மாதர் தம்மை
நம்பிக்கொண் டிருக்கின்ற மன்னா! உன்னைக்
கெடுத்துக்கொண் டிருப்பவளாம் அவளும் நீயும்
கீற்றுநிலா வெளிச்சத்தில் ஒன்று சேர்ந்து
படுத்துக்கொண் டிருப்பதுபோல் பகைவர் இங்கே
படமெழுதி விற்றாலும் விற்கக் கூடும்!
குடித்துக்கொண் டிருப்பவர்கள் அதனை வாங்கிக்
குவலயத்தில் பலரிடத்தும் காட்டக் கூடும்.

ஆதலினால் நீயவளை ஆற்று நீரில்
அமிழ்த்துவது சரியன்று. சிறிதா யுள்ள
மோதிரத்தை மிகப்பெரிய வளைய மாக்க
முயலாதே! நெருப்பிலெழும் புகையை வாயால்
ஊதுதற்கேன் நினைக்கின்றாய்? இப்போ துன்றன்
உணர்ச்சிகளை அடக்கிக்கொள் வேந்தே என்றான்.
வீதியுலா வருகின்ற மன்னன், அன்னோன்
விளக்கத்தை மறுக்காமல் ஏற்றுக் கொண்டான்.

பழுத்தெழுந்த செங்கதிரோன் மேற்கே சென்று
படுத்திருந்து மறுபடியும் கிழக்கே வந்து
விழித்தெழுந்த நேரத்தில் அமைச்ச ரோடு
வேந்தனவன் ஆசனத்தில் வீற்றி ருந்தான்.
இழுத்துவரப் பட்டவளாம் அவளை, முத்தம்
இடுதற்கு முயன்றானே இளைஞன், அன்னோன்
அழைத்துவரப் பட்டாங்கே நிறுத்தப் பட்டான்.
அன்னவனை அவ்வேந்தன் கூர்ந்து பார்த்தான்.

ஒருமூச்சை அறிஞர்களுக் கனுப்பி, மற்றும்
ஒருமூச்சை அமைச்சர்களுக் கனுப்பி, அன்னோன்
பெருமூச்சை, சிற்பியொடு தொடர்பு கொண்டு
பிழைபுரிந்து வந்தவளுக் கனுப்பி, அந்த
வருமூச்சை வானத்திற் கனுப்பி, அந்த
வாலிபனை மீண்டுமவன் உற்று நோக்கி;
அரைமூச்சு விடுபவனே! அவளும் நீயும்
அன்றாடம் பழகுவதாய்க் கேள்விப் பட்டேன்.

என்னுதட்டுக் குரியவளை, மதுக்கிண் ணத்தை
என்கையில் தருபவளை, ஷெரினென் பாளை,
உன்னுதட்டில் சேர்த்திடநீ விரும்பு கின்றாய்:
உனையவளும் விரும்புகின்றாள். நிலைக்கண் ணாடி
என்முகத்தை மட்டுந்தான் காட்ட வேண்டும்
என நினைத்தல் தவறன்றோ? இதோபார்! உன்னை
அன்னவளே விரும்புகின்றாள். இதனை நான்தான்
அறிந்துகொள்ளா திருந்துவிட்டேன். அதுபோ கட்டும்.

உன்விருப்பம் நிறைவேற வேண்டு மாயின்
ஒன்றுரைப்பேன் இதனைக்கேள்; எனது நாட்டின்
பின்புறத்தில் அசையாமல் படுத்தி ருக்கும்
பெரியமலை தனைக்குடைந்து வழியுண்டாக்கித்
தென்புறத்து நதியதனுள் ஓடு மாறு
செயவேண்டும். அவ்வாறு செய்வா யாயின்
அன்னவளை நீயடையக் கூடு மென்றான்.
அப்போதே புறப்பட்டான் அந்தச் சிற்பி.

மனத்தின்கண் காதலியை நிறுத்தி, நீண்ட
மலையின்கண் சிற்றுளியை நிறுத்தி, ஆங்கே
தினந்தோறும் மலையதனைக் குடைந்து பாதை
செய்துவந்தான் அச்சிற்பி. அன்னோன் செய்யும்
வினைப்போக்கின் புதுமைகளை ஊரார் கண்டு
வியப்படைந்து பாராட்டும் செய்தி கேட்டு
மனச்சோர்வோ டெழுந்திருந்தான் மன்னன், அந்த
மன்னவன்முன் ஓர்கிழவி வந்து நின்றாள்.

பஞ்செனவே நரைத்தவளை மன்னன் உற்றுப்
பார்த்தபடி "எதற்கு வந்தாய்?" என்று கேட்டான்.
நஞ்சுகொண்ட நெஞ்சத்தாள் அவனை நோக்கி
நானுன்றன் துயர்துடைக்க வந்தேன். அந்தப்
பஞ்சவர்ணக் கிளிபறந்து போமோ என்று
பார்த்திபனே கலங்காதே! இன்றே சென்று
வஞ்சகத்தால் நானவனை மடியச் செய்து
வருகின்றேன் பாரென்று கூறிச் சென்றாள்.

விரைவாகச் சிற்பியிடம் வந்தாள், வந்து
வெற்றிபல பெற்றவனாம் அவனை நோக்கிக்
கரும்பாம்பு தீண்டியதால் அந்த மங்கை
கர்ப்பூரம் அணைவதுபோல் அணைந்து விட்டாள்.
ஒருவாரம் ஆயிற்றே அப்பா! உன்னை
உயிர்க்குயிராய் நேசித்த மங்கை மாண்டு!
தெரியாதா உனக்கிந்தச் செய்தி என்று
சிற்பியிடம் பொய்யுரைத்துப் புலம்ப வைத்தாள்.

"பலர்புகழும் பாரசிக ரதியே! காதற்
பதிகத்தின் முதற்பாட்டே! இந்த நாட்டில்,
தலைசிறந்த புகழ்பெற்று விளங்கும் என்னைத்
தவிக்கவிட்டு நீமட்டும் சென்றிட் டாயே!
மலைமடியில் நானிங்கே இருக்க, நீபோய்
மரணத்தின் மடியதனில் வீழ்ந்திட்டாயே!
இலையினிமேல் எனக்கிங்கு வாழ்க்கை; கண்ணே!
ஏதென்றன் தோட்டத்தில் மரங்கள் பூக்கள்!

இனியெனக்கிவ் வையகமே சிறையின் கூடம்;

எல்லாமே பாலைவனம்; நெருப்புக் கோட்டை;

கனியெனக்கு வேப்பங்காய்; உமர்கை யாமின்

கவிதைகளும் எனக்கினிமேல் எட்டிக் காய்தான்.

இனியெதற்கு வீண்வாழ்க்கை? கண்ணே உன்னை

இழந்தபின்னர் எனக்கெதற்கு வசந்த காலம்?

உனையெனக்குத் தந்தவளே! ஊமைப் பூவே!

உன்னைப்போல் இறப்பதுதான் எனக்கும் இன்பம்!

எண்ணாத எண்ணமெலாம் எண்ணி எண்ணி

இருந்தேனே! இழந்தேனே உன்னை நானே!

அண்ணாந்து பார்க்கின்றேன். நீல வானில்

அழகுநிலா இருக்கிறது நீதான் இல்லை!

மண்ணாகி விட்டதடி வாழ்க்கை!" என்றே

மலைநிலத்தை முத்தமிட்டான். சாவைத் தொட்டான்.

கண்ணீரால் நதிசெய்தாள் மங்கை அங்கே!

கதையொன்று பாதியிலே முடிந்த திங்கே!

# மொகலாய மரபு

## பாபர் (1526 - 1530)




டாரா
ஷுஜா
ஔரங்கசீப்
(1656-1707)
மூராட்
மற்றவர்கள்
ஜேபுந்நிஸா
(1638-1702)
முஹம்மத் சுல்தான்
(1639-1676)
ஜீனத்துந்நிஸா
(1643-1712)
முஹமத் முஅஜ்ஜம்
(1647)
பத்ருந்நிஸா
(1647 நவ.17)
ஜப்தத்துந்நிஸா
(1651)
முஹம்மத்ஆஜம்
(1653-1707)
முஹம்மத் அக்பர்
(1658-1704)
மெஹ்ருந்நிஸா
(1661-1706)
முஹம்மத் காம்பக்ஷ்
(1667-1709)
பஹதூர்ஷா ஷா ஆலம் I
பட்டம் அரியணை - 1707

# வெந்நீரில் வெந்தவன்

அவன்கவிஞன்; அவன்பெயரோ அகில்கான்; சொல்லை

அமுதாக்கும் அவள்பெயரோ ஜபுஉன் னிஸ்ஸா.

அவளுக்கும் அவன்மீது காதல்; டில்லி

அமைச்சர்மகன் அவனுக்கும் அவள்மேல் காதல்.

அவளுக்கோ நினைவாற்றல் அதிகம்; காதல்

அதிபதிக்கோ பேச்சாற்றல் அதிகம்; ஆங்கே

அவன்வருவான் எதற்காக? அதற்கா கத்தான்!

ஆரணங்கும் வந்திடுவாள் அதற்கா கத்தான்!

அன்றொருநாள் அவன்வந்தான். அவளும் வந்தாள்.

அரண்மனையின் பின்புறத்தில் சந்தித் தார்கள்.

"இன்றுமுதல் இளவேனிற் பருவ"மென்றான்.

"இலுப்பைமரம் இங்கினிமேல் பூக்கு"மென்றாள்.

"தென்னையிலே செவ்விளநீர் இரண்டைக் காணோம்;

திருட்டுத்தான் போயிருக்க வேண்டு" மென்றான்.

என்னருமைக் காதலரே! அவற்றைத் தென்னை

எனக்கன்றோ பரிசளித்து விட்ட தென்றாள்.

சிரிப்புக்கு முல்லையிடம் பரிசு பெற்றாய்:

தென்னையிடம் இளநீரைப் பரிசு பெற்றாய்:

திருக்குர்ரான் முழுவதையும் ஒப்புவித்துச்

சிறுவயதில் தந்தையிடம் பரிசு பெற்றாய்,

இருக்கின்ற பரிசையெலாம் நீயே பெற்றால்

எனக்கேதும் கிடைக்காதே பெண்ணே! என்றான்.

உருக்கியசெம் பொன்னெதற்கு? நானே என்னை

உங்கட்குப் பரிசாகத் தருவேன் என்றாள்.

மதிப்பதற்குத் தெரிந்தவளே! தீராஸ் என்பாள்

மணிவயிற்றில் பிறந்தவளே! மக்பீ என்னும்

புதுப்பெயராம் புனைபெயரில் சிறப்பு மிக்க

புத்தகங்கள் எழுதியுள்ள மாதே! காதல்

நதிப்படகே! "நாஸ்தலீக்" "சிகாஸ் தா " போன்ற

நல்லபல காவியங்கள் படைத்த பெண்ணே!

விதைப்பதற்கு வந்துள்ளோம் இங்கே என்றான்.

விதைமுளைத்தால் "கதைதெரிந்து" விடுமே என்றாள்.

தலைசிறந்த செம்பொன்னே! "ருபாயி" என்னும்

சந்தத்தை மிகவிரும்பும் பெண்ணே! ஆற்றின்

அலையசையும் அழகைப்பார் என்றான். பார்த்தாள்.

அழகுமிகு மலர்களைப்பார் என்றான். பார்த்தாள்.

மலர்நடந்து செல்வதில்லை என்றான். பூத்த

மலர்மணந்தான் நடந்துசெல்லும் காற்றி லென்றாள்.

சிலர்நடந்து செல்வதில்லை என்று சொன்னான்.

சிலர்புகழே நடந்துசெல்லும் உலகில் என்றாள்.

முன்வந்த தைமூரும் செங்கிஸ் கானும்
முழுவெற்றி பெறவில்லை எனினும், இங்கே
உன்தந்தை, உன்பாட்டன் உன்முப் பாட்டன்
ஓங்குபுகழ் பெற்றுயர்ந்தார் பெண்ணே! என்றான்.
பொன்சிந்தும் அரண்மனையில் பிறந்த நானும்
புகழ்பெறுவேன் அவர்களைப்போல் என்று ரைத்தாள்.
உன்வாழ்க்கை வரலாற்றில் நானி ருப்பேன்.
உலகவர லாற்றில்நீ இருப்பாய் என்றான்.

பத்தடுக்கு மாளிகையை விட்டி றங்கிப்
பைங்கிளிநான் உமைக்காண வரும்போ தெல்லாம்
தித்திக்கும் கனிகொண்டு வருவேன். இன்றோ
சிறந்தநூல் கொணர்ந்துள்ளேன். நீங்கள் இந்தப்
புத்தகத்தைப் படித்துக்கொண் டிருங்கள்; நான்போய்ப்
பூப்பறித்து வருகின்றேன் என்றாள். "உன்வாய்
முத்திரைப்பூ இருக்கையிலேன் வேறு பூக்கள்!
முடிசார்ந்த மன்னவனின் மகளே!" என்றான்.

பெண்ணரசி மெதுவாக எழுந்தாள். காதற்
பேச்சாளன் அன்னவளை நோக்கி "நேற்றென்
தொண்டையில்மீன் முள்மாட்டிக் கொண்ட தென்றான்.
தோகையதைக் கேட்டவுடன் துடிக்க லானாள்.
மண்மயங்கும் இரவினிலே முக்கா டிட்டு
வந்தென்னைச் சந்திக்கும் நிலவே! அந்த
வண்டுகளைப் பாரந்த மலரி லென்றான்.
வானத்தில் பாருங்கள் பிறையை என்றாள்.

"அளந்தளந்து கட்டிவைத்த மண்ட பத்தில்
அசைந்தசைந்து நடப்பவளே! நிலவை யாரோ
பிளந்தெடுத்து விட்டெறிந்த கார ணத்தால்
பிறைவடிவாய் வானத்தில் மிதக்கு"தென்றான்.
"வளர்பிறையில் நெற்கதிர்கள் நன்கு முற்றும்;
மாந்தருடல் தனில்ரத்தம் சுரக்கு மென்றாள்.
தளர்பிறையாம் தேய்பிறையில், களிமண் பாண்டம்
சரியாகச் சூளையிலே வேகா" தென்றான்.

"தேய்பிறையின் வெளிச்சத்தில், உள்ளிப் பூண்டும்,
சிறுகிழங்கும் மிகநன்கு வளரு"மென்றாள்.
"வாய்சிவந்த பைங்கிளியே! மூங்கில் தன்னை
வளர்பிறையில் வெட்டுவது கூடா" தென்றான்.
ஓய்வெடுத்துக் கொண்டிருந்த நிலவு, மீண்டும்
உலாவந்து விட்டதென்றாள். "உச்சிக் குன்றில்
போய்ப்படுக்கும் வெண்ணிலவின் வெளிச்சம், நம்மைப்
போன்றோர்க்கு நாள்தோறும் தேவை" என்றான்.

பகல்நேரம் காதலர்க்குப் பகைதான் அந்தப்
பகல்நேரம் ஆந்தைக்கும் பகைதான் என்றாள்.
நகராத மலைச்சாரல் மலரே! மேகம்
நனைவதில்லை எனினுமது நகரு மென்றான்.
அகலாத விண்மீன்வெண் ணிலவைத் தேடி
அலைவதில்லை என்றாலும் அசையும் என்றாள்.
முகலாயச் சக்ரவர்த்தி மகளே! கோழி
முட்டையது பிறந்தவுடன் அசையா தென்றான்.

மன்னன்மகள் அதுகேட்டு வியந்தாள். காதல்
　　மயக்கமுள்ள கட்டழகன் அவளை நோக்கி,
உன்னுடைய நூலகத்தில் உள்ள நூற்கள்
　　ஒருலட்சம் இருக்குமென எண்ணு கின்றேன்.
என்னுடைய நூலகமே நீதான், காதல்
　　இலக்கியமெல் லாமெனக்கு நீதான் என்றான்.
ஒன்றுபட்டுக் காதலிக்கும் நேரம் தன்னில்
　　உதடுகளே இலக்கியமாய் மாறு மென்றாள்.

ஓவியமே! உன்தந்தை லாகூர் தன்னில்
　　ஓய்வெடுத்துக் கொள்வதற்கு வந்த போது,
பாவரங்க நிகழ்ச்சியினைத் தள்ளி வைத்துப்
　　பைங்கிளியே! அவரோடு நீயும் வந்தாய்.
ஆவலொடு நீஇருந்த இடத்தை நாடி
　　அன்றொருநாள் கொத்தனார் வேட மிட்டுக்
காவலரை ஏமாற்றி உள்ளே வந்துன்
　　கன்னத்தில் எத்தனையோ முத்த மிட்டேன்.

நாடாளும் உன்தந்தை ஆண்டொன் றுக்கு
　　நான்குலட்சம் பொன்தரநீ அதனைப் பெற்று
வீடேதும் இல்லார்க்கும், மெக்கா செல்ல
　　விரும்புகின்ற பயணிகட்கும், விதவை கட்கும்,
ஏடாயி ரங்கோடி தேடு வோர்க்கும்,
　　இலக்கியங்கள் படைப்போர்க்கும், அள்ளி அள்ளி
நாடோறும் வழங்குகின்றாய்; உனக்கு நானோ
　　நாள்தோறும் முத்தந்தான் வழங்கு கின்றேன்.

கதைமட்டும் சொல்லாமல் பார சீகக்
கவிதைகளும் சொல்பவளே! காதல் மாதே!
எதுவட்டம்? எதுசதுரம்? எதுமுக் கோணம்?
இதற்குவிடை கூறுகநீ இப்போ தென்றான்.
மதிவட்ட முகமுடையாள் அவனை நோக்கி,
வான்வட்டம், நிலம்சதுரம், தீமுக் கோணம்,
சதைவட்டம் என்வதன வட்டம்; அந்திச்
சந்திரன்வந் தென்முகத்தில் ஒட்டு மென்றாள்.

ஆடலுண்டு நாள்தோறும் அங்கே; வெய்யில்
அடங்கியபின் வருகின்றோம் இங்கே என்றான்.
கூடலுண்டு; நமக்கிங்கே ஊட லுண்டு;
கூட்டலுண்டு; கழித்தல்மட்டும் இல்லை என்றாள்.
மூடலுண்டு; திறத்தலுண்டு; முத்த முண்டு;
முத்தத்தில் எட்டுவகைச் சத்தமுண்டு;
பாடலுண்டு நள்ளிரவில் கைப்பந் தாட்டப்
பயிற்சியிங்கே நடப்பதுண்டு பெண்ணே என்றான்.

மாலையில்நான் இரண்டுமுறை குளித்தேன் என்றாள்.
மறுபடியும் நீகுளிக்க நேரும் என்றான்.
காலையில்நான் குளிக்கும்போ தெல்லாம், அண்டங்
காக்கைகளும் தவறாது குளிக்கும் என்றாள்.
நீலமயில் போன்றவளே! இப்போ திந்த
நிகழ்ச்சிநிரல் முடிவுற்ற பின்னர் சென்று,
பாலதனில் குளித்திடுக என்றான். உங்கள்
பார்வையெனும் குளத்தில்தான் குளிப்பேன் என்றாள்.

எதுகொடுத்தால் எதுகிடைக்கும்; இப்போ தென்றான்.
இதழ்கொடுத்தால் இதழ்கிடைக்கும்; இதனை யன்றி
நிதிகொடுத்துக் கேட்டாலும், உங்கட் கிங்கே
நிச்சயமாய் விருந்தெதுவும் கிடைக்கா தென்றாள்.
மதுகிடைக்க வழியுண்டோ? என்றான். நாட்டில்
மதுவிலக்கு நடைமுறையில் இருப்பதாலே,
அதுகிடைக்க வழியில்லை; கிடைத்த போதும்
அதைக் கொடுக்க நான்விரும்ப வில்லை என்றாள்.

அடையாளச் சித்திரமே! உன்றன் தந்தை
அரசவையில் இசைவாணர் பாடு தற்குத்
தடைவிதித்தார். பிறந்தநாள் விழாவின் போது
தங்கத்தால், வெள்ளியினால் வேந்தர் தம்மை
எடைபோடும் வழக்கத்தை நிறுத்த லானார்.
எனினுமவர், இந்நாட்டுப் பெண்கள், அன்ன
நடைபோட எத்தடையும் விதிக்க வில்லை.
நானவரைப் பாராட்டு கின்றேன் என்றான்.

முதலிரவு முகவுரையைப் போன்ற தென்றாள்.
முடிவுரையே காதலுக்குக் கிடையா தென்றான்.
நதியிங்கே யாரென்றாள். நீதான் என்றான்.
நம்முலகம் தனியென்றாள். ஆமாம் என்றான்.
இதுவரையில் பசியடங்க வில்லை என்றாள்.
ஏந்திழையை இருகரத்தால் தழுவலானான்.
குதிரைப்பால் தனைநன்கு புளிக்க வைத்துக்
குடித்தவர்கள் மயங்குதல்போல் மயங்க லானார்.

தன்மகளும் அன்னவனும் தோட்டம் தன்னில்
சந்தித்துப் பழகுவதை ஒற்றர் மூலம்
அன்றிரவு மொகலாயச் சக்ர வர்த்தி
ஔரங்க சீப்பென்பான் கேள்விப் பட்டுப்
பொன்னுக்கும் பித்தளைக்கும் உறவா? வேங்கைப்
புலிநகமும் எலிநகமும் ஒன்றா? நான்போய்
இன்றிரவே இதற்கிங்கோர் முற்றுப் புள்ளி
இடவேண்டும் என்றெண்ணிக் கொண்டெ ழுந்தான்.

ஆத்திரத்தோ டவ்விடத்தை விட்டெ ழுந்தோன்
அரண்மனைப்பூந் தோட்டத்தை நோக்கி வந்தான்.
பூத்தமலர் விழிமாதும் அவனும் ஆங்கே
புவியாள்வோன் வரக்கண்டு திகைக்க லானார்.
வார்த்தசிலை போன்றவளோ, அருகில் மன்னன்
வருவதற்குள் தோட்டத்தில் இருந்த வெந்நீர்ப்
பாத்திரத்துள் காதலனை மறைக்க லுற்றாள்.
பாராள்வோன் ஆங்கதனைப் பார்த்து விட்டான்.

ஏனிங்கே நீவந்தாய்? எதற்கு வந்தாய்?
இங்கென்ன வேலையுனக் கென்று கேட்டான்.
மானிங்கே வந்திருக்கும் என்று வந்தேன்
மன்னவனே என்றுரைத்தாள். வெந்நீர் வைக்கும்
ஏனத்தில் வேறெதுவும் உளதோ? என்றான்.
இல்லையப்பா! வேறெதுவும் இல்லை என்றாள்.
நானிங்கே குளித்தாக வேண்டும்; நீரை
நன்றாகச் சூடேற்று விரைவில் என்றான்.

பாத்திரத்தின் அருகினிலே மெதுவாய் அந்தப்
பத்தரைமாற் றுத்தங்கம் நடந்து சென்றாள்.
ஆத்திரத்தோ டவ்விடத்தில் நின்ற மன்னன்
அதட்டலுற்றான். பேரழகி அதிர்ச்சி யுற்றாள்.
நீர்த்துளிகள் விழிவாசல் வழியில் நிற்க,
நிலைகுலைந்து கொப்பரையின் அருகில் நின்று,
"பூத்தமலர் மீதுறங்கும் வண்டே!" என்றாள்.
பொன்னழகன் பெருமூச்சு மட்டும் விட்டான்.

ஒன்றுபட்ட காதலரே! நமக்கிங் கேதும்
ஊறுவரா தென்றெண்ணிக் கொண்டி ருந்தோம்.
இன்றிந்தச் சோதனைக்கா ளாகி, இங்கே
இருவருமே துடிக்கின்றோம். இந்த நாட்டின்
மன்னவராம் என்தந்தை உம்மைக் கொல்ல
வற்புறுத்து கின்றார்நான் என்ன செய்வேன்!
புன்னைமரம் வெட்டுண்டு வீழ்ந்தால், இந்தப்
பொற்கொடியாள் நிழலுக்குப் போவதெங்கே?

வித்தையினால் நான்வெல்வேன்; நீயோ என்னை
விழிகளினால் வென்றிடுவாய் என்று கூறி,
முத்தமிட்ட காதலரே! புதிய பூக்கள்
மூச்சுவிடும் தோட்டத்தில், தங்கள் ஆவி
அத்தமிக்கக் காரணம்நான் ஆனேன்! அந்தோ!
அனல்பட்டுத் துடிதுடிக்கும்போது நீங்கள்
சத்தமிட்டால் நம்முறவு தெரிந்து போகும்;
தையலென்றன் சரித்திரமும் சாம்ப லாகும்.

ஆதலினால் வாய்திறவா திருப்பீர் என்றன்

ஆருயிரே! என வேண்டிக் கேட்டுக் கொண்டாள்.

கோதையவள் வருங்கால வாழ்வை எண்ணிக்

கொப்பரையில் அகப்பட்டோன் ஊமையானான்.

வேதனையில் வெந்தவளோ, அடுப்பில் வைத்த

விறகுக்குத் தீயிட்டாள்; கண்ணீர் விட்டாள்.

சோதனையில் சிக்கியவன், மங்கை சொன்ன

சொற்காத்தான், வெந்நீரில் வெந்து செத்தான்.

கலைவளர்க்க ஒருகாலம்; என்றன் வாழ்வில்

காதலிக்க ஒருகாலம்; கண்ணீர் விட்டுப்

புலம்புதற்கும் ஒருகாலம்! இனிமேல் ஏது

பொற்காலம்? புதுவாழ்வு பொங்கும் காலம்?

இலையெனக்கு நற்காலம்; இனிமேல் என்றன்

எதிர்காலம் உதிர்காலம் என்று கூறிக்

குலைவாழை காற்றினிலே சாய்தல் போலக்

கொப்பரையின் மீதினிலே கோதை சாய்ந்தாள்!

# அமுதும் தேனும்

அலைகடலும் அக்கடலை நாடிச் செல்லும்

ஆறுகளும் நீர்வழங்கும் ஆந்தி ரத்தில்,

மலைபடுத்துக் கொண்டிருக்கும் சிற்றூர் ஒன்றில்,

மகாகவியாம் சகந்நாதன் என்பான் வாழ்ந்தான்.

பலர்புகழும் தைலங்கர் மரபில் வந்த

பாவலனாம் அன்னவனோ இசைஞா னத்தில்

தலைசிறந்தோன்; அலங்கார சாத்தி ரத்தில்

தனக்குநிகர் இல்லையென விளங்கி வந்தோன்.

குடைசெய்யக் கூடைமுறம் கட்ட, மாந்தர்

குடியிருக்கும் குடிசைக்குக் கூரை போடப்

படுக்கும்பாய் பின்னமுடி யாத வாறு

பனையோலைப் பஞ்சத்தைத் தோற்று வித்தோர்

இடைக்காலப் புலவர்களாம். அவர்கள் போலும்,

எண்ணற்ற புத்தகங்கள் எழுதிடாது

கடைச்சங்க காலத்துச் சான்றோர் போன்று

கச்சிதமாய்ச் சிலநூற்கள் மட்டும் தந்தோன்.

ஆற்றோரம் அவன்வீடாம்: அந்த வீட்டில்
அவனோடு விவாதித்தோர் தம்மை யெல்லாம்,
காற்புள்ளி அரைப்புள்ளி யாக்கிக் கீழே
கவிழ்த்தகுடம் போலாக்கிக் காட்டி வந்தோன்.
மேற்கிலுள்ள கருங்கடலை ஒவ்வோர் நாளும்
மேற்பார்வை இடுகின்ற கதிரோன் போன்றோன்.
நூற்றாண்டால் மட்டுந்தான் பிந்திக் கொண்டான்.
நூதனத்தால் அவன்பலரை முந்திக் கொண்டான்.

தாய்மொழியோ அவனுக்குத் தெலுங்கென் றாலும்
தலைசிறந்த பாரசிக மொழியும், சொன்னால்
வாய்மணக்கும் தமிழ்மொழியும் அறிவான். மற்றும்
வடமொழியும் பிறமொழியும் அறிவான். நீயேன்
ஓய்வெடுத்துக் கொள்ளாமல் சுற்று கின்றாய்
உறங்கியெழக் கூடாதோ? என்று கேட்டால்,
பாய்விரித்துச் சூரியனா படுக்கும்? சுற்றும்
பம்பரமா அசையாமல் இருக்குமென்பான்.

மரணமிலாப் பெருவாழ்வும் புகழும் பெற்ற
மகாகவியாம் அக்கவிஞன், குயில்கள் கூவும்
பருவமெனும் கோடையிலே ஓர்நாள், பாட்டுப்
பயணத்தை மேற்கொண்டு வடக்கே சென்றான்.
கருவிமழை போற்சிறந்தோன் 'இபதத் கானா'
கட்டத்தில் பேரரசர் அக்பர் முன்னால்,
அரியதொரு கவிபாடிப் பரிசு பெற்றான்.
ஆத்தானக் கவியென்னும் பதவி பெற்றான்.

முதன்முதலில் ருகய்யாவை மணந்து கொண்ட
முகலாயச் சக்ரவர்த்தி அக்பர்; மற்றோர்
புதுமதியாம் ஸலீமாவை மணந்து கொண்டார்.
புகழ்பெற்ற ரஜபுத்ர நாட்டுப் பெண்ணை
அதன்பின்னர் அவர்மணந்து கொள்ள லானார்.
அவள்வயிற்றில் பிறந்தவளாம் லவங்கி என்பாள்,
நதியலைகள் தாலாட்டும் மலரைப் போன்றாள்,
நாட்குறிப்புக் குதவுகின்ற நிலவைப் போன்றாள்.

எட்டுச்சாண் தங்கமவள் அங்கம்; தெங்கின்
இளநீர்போல் பால்மேடு, பருவமேடு;
வட்டமிட்ட வெண்ணிலவைப் பாதியாக
மடித்ததுபோல் அவள்நெற்றி; முகத்தின் வெற்றி;
கட்டாணி முத்தைப்போல் பற்கள்; கோவைக்
கனியைப்போல் வாயிதழ்கள்; கருப்பைக் குள்ளே
திட்டமிட்ட படியமைக்கப் பெற்ற முப்பத்
திரண்டுவகை உறுப்புகளும் கரும்பின் கட்டு.

அக்காடும் இக்காடும் ஆலங் காடும்,
ஆர்க்காடும் மாங்காடும் திருவேற் காடும்,
பொய்க்கோபம் தனைக்காட்டும் இந்த்ர கோபப்
பூச்சிகளின் இருப்பிடமாம் முல்லைக் காடும்,
மக்கட்கு நிழல்கொடுக்கும் இயற்கைக் காடாம்.
மங்கையவள் முக்காடோ செயற்கைக் காடாம்.
நெய்க்கூந்தல் குதிகாலைத் தொடுமாம்! செம்பொன்
நிறப்பூக்கள் கருங்குழலைத் தொடுவ துண்டாம்!

ரதமேறும் ஆத்தானக் கவிஞன் ஓர்நாள்,
ரசகங்கா தரமென்னும் தனது நூலைச்
சுதிசேர்ந்த குரலோடு பாடிக் காட்டிச்
சூழ்ந்திருந்தோர் அனைவரையும் வியக்கச் செய்தான்.
அதிரூப சுந்தரியாம் லவங்கி என்பாள்
அந்நூலைச் செவிலித்தாய் மூலம் பெற்றுப்
பதப்பட்ட நள்ளிரவில், தனித்தி ருந்து
பசித்திருந்து படித்ததனைச் சுவைக்க லானாள்.

"மலைவரிசைக் கவிஞர்களுள் ஒருவ ரான
மௌலானா ரூமியைநான் இதுநாள் மட்டும்
தலைசிறந்த கவிஞரெனக் கருதி வந்தேன்.
சகந்நாத கவியாமிக் கவியின் முன்னே
உலையரிசிக் கவிஞரவர். இவரே இந்நாள்
உமர்கையாம். அத்தகைய உமர்கை யாமின்
இலக்கியத்தை மதிக்கும் நான், மணந்து கொண்டால்
இவரைத்தான் மணந்து கொள்வேன்" என்றிருந்தாள்.

பகலினது மறுபுறமாம் இரவில், ஆங்கோர்
பக்கத்தில், சலவைக்கல் மண்ட பத்தில்,
சகம்புகழும் மன்னவனோ கவிஞ னோடு
சதுரங்கம் ஆடுகின்ற பொழுதில் "கண்ணில்
முகம்புகுமோ எனக் கேட்டான் வேந்தன்." "ஆசை
முகம்புகுந்து விடுமென்று" கவிஞன் சொன்னான்.
"அகலாத மீனெம்மீன்?" என்று கேட்டான்.
"அம்மீன்தான் அதோதெரியும் விண்மீன்" என்றான்.

"மீன்வியர்வை சிந்துவதே இல்லை, தண்ணீர்
வீட்டிலது வாழ்வதனால்" என்றான் வேந்தன்.
"நான்வியர்வை சிந்தியுள்ளேன் நாட்டுக் காக
நாடாளும் மன்னவனே" என்றான் கற்றோன்.
"தேன்வியர்வைப் பூக்களுக்குத் தூக்கம் வந்தால்
சிறுதும்பி உண்ணாநோன் பிருக்கும்" என்று
வான்வியர்வைப் பேரரசன் உரைக்க லானான்.
மாகவிஞன் அதைக்கேட்டு வியக்க லானான்.

நிலவரியை நான்குறைத்தேன்; இந்து மக்கள்
நெஞ்சத்தை நன்குணர்ந்து "ஜெஸியா" என்னும்
தலைவரியை நான்தடுத்து நிறுத்த லானேன்.
சமுத்திரத்தில் எழும்தண்ணீர்ச் சுவர்கள் என்னும்
அலைகளுக்கா வரிவிதிக்க முடியும்? கங்கை
ஆற்றினிடம் வரிகேட்டால் அதுவா நல்கும்?
சிலவரிகள் எப்போதும் இருந்தே தீரும்
சிரிப்பதற்கு வரிவிதிக்க முடியா தன்றோ?

மாறுதலை உண்டாக்கத் துடித்தெ ழுந்த
மாவீரன் தைமூரின் வம்சம் தன்னில்,
ஆறுதலை முறைகட்குப் பின்னர் தோன்றி
அனைவரையும் வீரத்தால் வென்ற பாபர்.
சேறுபடிந் திருக்கின்ற சமுதா யத்தைச்
சீர்திருத்தம் செயமுயன்றார். அதற்குப் பின்னர்
நூறுமுறை நான்முயன்றும் இன்னும் என்னால்,
நுனிக்கொம்பைப் பிடித்திழுக்க முடிய வில்லை.

ஆண்மக்கள் இல்லையெனில் வீர மில்லை.
அகிலத்தில் பெண்களின்றேல் கவர்ச்சி இல்லை.
ஆண்பாலும் பெண்பாலும் கலந்தா லன்றி
ஆனந்தக் களிப்பேது புவியின் மீது?
தீண்டத்தான் நாமெல்லாம் பிறந்தோ மன்றித்
தீண்டாமல் வாழ்வதற்கோ பிறந்தோம்" என்றான்
தீண்டாமல் உறவில்லை உணர்ச்சி இல்லை,
தீண்டாமை வேண்டாமை என்றான் கற்றோன்.

மான்வளர்த்தால் கத்தூரி கிடைக்கும்; ஆல
மரம்வளர்த்தால் நிழல்கிடைக்கும்; கூடு கட்டித்
தேன்வளர்த்தால் சுவைகிடைக்கும்; கல்வி என்னும்
செல்வத்தை நாம்வளர்த்தால் பெருமை சேரும்;
தேன்வளர்த்தோ, மான்வளர்த்தோ காட்டி டாமல்
தீண்டாமை வளர்ப்பானேன்? தலையின் மீது
பேன்வளர்த்துக் காட்டுவதோ நாக ரீகம்?
பேதமையன் றோ! என்றான் வீர வேந்தன்.

பெருங்கவிஞன் "ஆம்அரசே; ஆம்ஆம்" என்றான்.
பின்னரந்தப் புலிவேந்தன் கவியை நோக்கி,
"இருளதனை விலைகொடுத்து வாங்கும் மூடன்
இப்புவியில் யாரென்று" கேட்க லானான்.
மருத்துவத்தால் தீராத நோய்கள், தெய்வ
மகத்துவத்தால் தீருமெனச் சொல்வோன் என்றான்.
அருத்தமற்ற சத்தமெது கவியே என்றான்,
அச்சத்தம் மந்திரத்தின் சத்த மென்றான்.

என்றென்றும் பெரும்புகழுக் குரியோன்; கைவேல்
எடுத்தெறியும் மாமன்னன் அதனைக் கேட்டு,
நன்றுநன்று நானிதனை ஒப்பு கின்றேன்.
நகரட்டும் சதுரங்கக் காய்கள் என்றான்.
மன்னவனும் அன்னவனும் ஆட்டம் தன்னில்
மனம்பதித்து விளையாண்ட. சிறிது நேரம்
சென்றபின்னர்த் தேர்வேந்தன் தண்ணீர் கேட்டான்.
சேடியவள் அறைநோக்கி ஓட லானாள்.

மீன்பள்ளி கொள்ளுகின்ற குளத்தில் பூத்து
விரிந்தமலர் போன்றிருந்த லவங்கி என்பாள்,
தான்பள்ளி கொள்ளுகின்ற மஞ்சம் தன்னில்
தனித்திருந்த சமயத்தில் தோழி வந்தாள்.
ஏன்வந்து நிற்கின்றாய் தோழி என்றாள்.
இளங்கொடியாள் விவரத்தைச் சொல்லக் கேட்டுக்
கூன்விழாப் புகழ்பெற்றோன் புதல்வி, தங்கக்
குடத்தினிலே நீரெடுத்துக் கொண்டு சென்றாள்.

பளிச்சென்றோர் அழகான வெளிச்சம், ஆங்கே
பாய்ந்துவரப் பாவேந்தன் நிமிர்ந்து பார்த்தான்.
விளக்கில்லை அவளிருந்தாள் வெளிச்ச மாக!
மின்னலில்லை அவளிடைதான் மின்னிற்றங்கே!
கிளிச்சந்த மொழியாளின் எழிலைக் கண்டு
கிறுகிறுத்தான். கிளர்ச்சியினால் உந்தப் பெற்றான்.
தளர்ந்தோடும் நதியின்நீர் கார்கா லத்தில்
தனிவேகம் பெறுவதுபோல் உணர்ச்சி பெற்றான்.

நல்வெளிச்சம், அல்லிப்பூ இரவில் தோன்றி
நகர்ந்துசெல்லும் நிலாவெளிச்ச மாகும். கொல்லை
முல்லைமலர் போன்றவளாம் அவளும் கொற்கை
முத்துநிலா வெளிச்சந்தான் அந்தப் பெண்ணின்
பல்வெளிச்சம், பவளஇதழ் வெளிச்சம், பார்வைப்
பட்டினத்து மீன்வெளிச்சம் பட்டு, வைரக்
கல்வெளிச்சம் போலானாள். அதுநாள் மட்டும்
காணாத ஓவியத்தை ஆங்கே கண்டான்.

பட்டாடை கட்டிவந்த நிலவோ; வெள்ளிப்
படிக்கட்டில் நடந்துவந்த சிலையோ! யாரும்
வெட்டாமல் உருப்பெற்ற கடலை விட்டு
வெளிவந்த வெண்முத்தோ! மலர்ப்பூங் கொத்தோ!
கொட்டாவி விடத்தெரிந்த முல்லைப் பூவோ!
குயிலுக்கே குரல்கொடுக்கும் குயிலோ! கையால்
தொட்டாலும் இனிக்கின்ற கரும்போ! தேனோ!
தூங்காத தாமரையோ! தங்கத் தேரோ!

வினையுவமை பயனுவமை உறுப்ப மைப்பை
விளக்குகின்ற மெய்யுவமை மற்றும் வண்ணம்
தனைக்குறிக்கும் உருவுவமை என்று கூறும்
தமிழ்மொழிநூல் இலக்கணத்திற் கேற்ப; இப்பெண்
வினைபயன்மெய் உருஇவற்றின் கூட்டோ! அந்த
வெள்ளிநிலா இவள்முகத்திற் கெடுத்துக் காட்டோ!
மனமயக்கம் உண்டாக்கும் இவள்யார்? செம்பொன்
வார்ப்படமோ? தேன்குடமோ? வான வில்லோ!

சீதையைநான் பார்த்ததில்லை, அவளைப் பற்றித்

தீட்டிவைத்த ஏட்டினைநான் படித்த துண்டு

காதுவரை போய்த்திரும்பும் பளிங்குப் பார்வை

காட்டுமிவள் அவள்தானோ? பருவம் வந்தும்

தூதனுப்ப மறந்துவிட்ட மாதோ? விண்மீன்

தோரணமோ! எனக்கவிஞன் ஐய முற்று,

மாதர்க்குல மாமணியாம் அவளைப் பார்த்தான்.

மழைநீரின் கோடுகளை மன்னன் பார்த்தான்.

பெண்ணையவன் பார்க்கையிலே விண்ணைப் பார்த்தாள்.

பிழைத்திருத்தம் செய்வதற்கே வழியில் லாத

விண்ணையவன் பார்க்கையிலே மண்ணைப் பார்த்தாள்.

மேலுமவள் இழுக்கடித்தாள். புரிந்து கொண்டான்.

மண்பரவும் கிழங்குகளில் கருணை போன்றோன்

மறுபடியும் அவள்முகத்தைப் பார்க்கும் போது,

கண்ணையவன் கண்ணிலிட்டுக் கொண்டே செவ்வாய்க்

கதவுகளை மெதுவாகத் திறக்க லானாள்.

தன்னியல்பு மாறாத பகுதி போன்று

தானிருந்தான் அக்கவிஞன் அதுநாள் மட்டும்.

அந்நிலையை மாற்றுகின்ற விகுதி போலும்

அவளிருந்த காரணத்தால் விகாரப் பட்டு

முன்னிருந்த நிலைமாறி வேறு பட்டான்.

முகத்தாலே நோய்செய்தாள்! துடிக்க லானான்.

மன்னவனோ தண்ணீரால் தாகம் தீர்த்தான்.

மணிவிழியால் புதுப்பாடம் தொடங்க லானார்.

மூக்கின்மேல் அழகான மச்ச முள்ள
மொகலாயப் பேரரசன் அவனை நோக்கி,
ஊக்கத்தால் என்பாட்டன் உயர்ந்தார், சற்றும்
ஒளிக்காமல் வரலாற்றை எழுதி வைத்தார்.
பாக்கொன்றைக் கடிப்பதற்குள் லோடி மன்னன்
படையதனை முறியடித்து வெற்றி கண்டார்.
நேர்க்கோட்டில் அவர்நின்றார்! நானும் மக்கள்
நிழற்கோட்டில் நிற்கின்றேன் என்று கூறி,

ஆட்டத்தில் நாட்டத்தைச் செலுத்த லானான்.
ஆங்கந்த நேரத்தில் காதற் பார்வை
ஓட்டத்தை அக்கவிஞன் நிறுத்த லானான்.
ஓவியமும் அவ்வாறே நிறுத்த லானாள்.
பாட்டரசன் மெதுவாக நிமிர்ந்தான். வெற்றிப்
படையரசன் அப்போதக் கவியை நோக்கி,
ஏட்டரசே! என்மகளாம் இவளைப் பற்றி
இப்போதே வர்ணித்துப் பாடென் றிட்டான்.

எச்சில்முத்தம் இடாதவளை அதுநாள் மட்டும்
எவருளத்தும் புகாதவளைக் கூர்ந்து நோக்கிக்
கச்சிதமாய் வர்ணித்தான் கவிஞன். அன்னோன்
கற்பனையைக் கேட்டுவியப் புற்ற வேந்தன்,
அச்சரத்துக் கோர்லட்சம் தரலாம்; மேலும்
அள்ளியள்ளித் தந்திடலாம்; கவிஞர் கோவே!
இச்சமயம் உனக்கேதும் வேண்டு மென்றால்
என்னைக்கேள் தருகின்றேன் என்று ரைத்தான்.

முதற்காதல் நினைவுடைய கவிஞன், அந்த
மொகலாய மன்னவனைக் கூர்ந்து நோக்கிக்
குதித்தோடும் குதிரைகளோ, சிறந்த முத்துக்
குவியல்களோ செம்பொன்னோ வேண்டாம் வேந்தே!
புதுக்கோட்டை அரண்மனையில் வாழும் இந்தப்
பூவையெனும் பாவையைநான் அடைவே னாயின்
அதற்குப்பின் இனித்திடுமோ அமுதும் தேனும்?
அளிப்பதெனில் இவளையெனக் களிப்பீர் என்றான்.

தேர்வேந்தன் மகாகவியின் பேச்சைக் கேட்டுத்
திடுக்கிட்டான். அலைமோதும் நதிபோல் ஆனான்.
நேர்க்கோடு போன்ற மன்னன் தனது வாக்கை
நிறைவேற்றும் எண்ணத்தோ டவனை நோக்கி;
ஓர்வார்த்தை பாவலனே! இதனைச் சற்றே
உற்றுக்கேள்! இப்போது நீயென் னோடு
சேர்ந்துண்டால் சேயிழையைப் பெறலாம் என்றான்.
தேன்கவிஞன் ஆங்கதனை ஏற்றுக் கொண்டான்.

ஆயிரத்தைந் நூற்றுநாற் பத்தி ரண்டாம்
ஆண்டதனில் பிறந்தவராம் அக்ப ரோடு,
சேயிழையாம் அன்னவளை அடைய வேண்டிச்
சேர்ந்துண்டான். அப்போதக் கவிஞ னுக்கோ
தீயினது தத்துவமாம் பசியே இல்லை!
செந்தேனும் அவன்நாவுக் கினிக்க வில்லை
ஆயகலை வாணனுக்கோ அந்நே ரத்தில்
அறுசுவையில் ஒருசுவையும் தெரிய வில்லை.

தென்னகத்தில் பிறந்தவனே! எதையும் நன்கு
　　　　தேர்ந்தெடுக்கத் தெரிந்தவனே! கவிக்கோ மானே!
என்னுடைய காலத்தை உலகில் வாழ்வோர்
　　　　எல்லோரும் பொற்காலம் என்கின் றார்கள்!
உன்னுடைய காவியத்தைப் படித்தோர் உன்னை
　　　　உமர்கையாம், பிர்தௌஸி, என்கின் றார்கள்.
என்புதல்வி உன்னைத்தான் விரும்பு கின்றாள்
　　　　என்பதனைக் குறிப்பால்நான் தெரிந்து கொண்டேன்.

முன்கோபம், அக்கோபம் மோனைக் கோபம்.
　　　　மொகலாய பரம்பரைக்கே உரிய கோபம்.
பின்கோபம், அக்கோபம் எதுகைக் கோபம்.
　　　　பெரும்பாலும் என்தந்தைக் கிருந்த கோபம்.
என்கோபம் போர்வாளைத் தேடும் கோபம்.
　　　　ஈங்கதனை நான்காட்ட விரும்ப வில்லை.
பொன்னைத்தான் நீகேட்பாய் என்றி ருந்தேன்;
　　　　புதல்வியையே பரிசாகக் கேட்டு விட்டாய்.

அந்தமதம் இந்தமதம் என்கின் றார்கள்.
　　　　அன்றாடம் குறைகூறித் திரிகின் றார்கள்.
வந்தமதம் உங்கள்மதம் என்கின் றார்கள்.
　　　　வரலாற்றைப் புராணத்தால் மறைக்கின் றார்கள்.
சிந்தனையில் தெளிவில்லார் எங்க ளோடு
　　　　சேர்ந்துண்ணக் கூடாதென் றெதிர்க்கின் றார்கள்.
இந்துமுஸ்லீம் சேர்ந்துண்ணா இக்கா லத்தில்
　　　　எதிர்ப்புக்கும் அஞ்சாமல் என்னோ டுண்டாய்.

அரும்புகொப் புளித்ததுபோல் சிரித்துப் பேசும்
ஆரணங்காம் தன்மகளை, ஒவ்வோர் நாளும்
கரும்புகொப் புளித்ததுபோல் பாக்கள் பாடும்
கம்பர்மகன் காதலித்து வந்திட் டானாம்.
இரும்புகொப் புளித்ததுபோன் றிருந்த சோழன்
இதையறிந்து காதலனைக் கொன்றிட்டானாம்.
நரம்புகொப் புளிக்கின்ற காதல் வேகம்
நானறிவேன்: சோழன்தான் அறிந்தா னில்லை.

மதம்வேறு பட்டாலும், காதல் கொண்டோர்
மனம்வேறு படுவதில்லை. கெடுவ தில்லை.
நதியோடிக் கடலில்தான் கலக்க வேண்டும்.
நன்னீரில் அனிச்சந்தான் மலர வேண்டும்.
அதிகாரம் என்னுடைய கையில். ஓர்சாண்
அகலமுள்ள வெண்ணிலவோ இரவின் கையில்.
புதுநாளின், முகவுரையோ காலை வெய்யில்.
பொறுப்புக்கள் இனியுங்கள் இருவர் கையில்.

வரவேற்புக் குரியவனே! கீர்த்தி சேர்த்து
வருகின்ற பாவலனே! நாடே போற்றும்
அரசாங்கக் கவிஞன்நீ. மேலும் நீயோர்
ஆணழகன். பேச்சாளன். தர்க்க வாதி.
பரிசாக என்னிடம்நீ பெறவி ரும்பும்
பாவைஇவள் புகழ்பெற்ற திருவெம் பாவை.
சரியான கலப்புமணம் இதுதான்! இன்பத்
தடாகத்தில் தாமரைப்பூ முகம்பார்க் கட்டும்!

பொருள்மீதும், பொருளைவிடப் புதல்வர் மீதும்,
புதல்வர்தமைக் காட்டினும்தன் உடலின் மீதும்,
அரியவுடல் அதனினும்ஐம் பொறிகள் மீதும்
அவற்றினுக்கும் மேலாம்தன் உயிரின் மீதும்
பிரியம்வைக்கக் கூடியவன் மனிதன். என்றன்
பிரியமெல்லாம் என்னருமைப் பெண்மீதேதான்.
விரிவுரைநான் ஆற்றுதற்கு விரும்ப வில்லை.
வித்தகனே ஏற்றுக்கொள் இவளை என்றான்.

எல்லைகொண்டான் இவ்வாறு கூறச் செய்யுள்
எதுகை கொண்டான் அதுகேட்டு மகிழ்ந்தான். இன்ப
வல்லிகொண்டான் வாழ்வுதந்தான் என்று, ராஜா
மன்சிங்கும பீர்பாலும் மகிழ்ச்சி கொண்டார்.
கொல்லிகொண்டான் எனும்கொங்கு நாடன் கேட்டுக்
குதூகலித்துப் பாராட்ட லானான். தெய்வம்
இல்லையுண் டென்பதுபோல் சந்தே கத்திற்
கிடமளிக்கும் இடையுடையாள் மகிழ்ச்சி யுற்றாள்.

படைநடத்தி வெற்றிபெற்ற பாபர் பேரன்;
பார்புகழும் பேரரசர் அக்பர், பச்சைக்
கொடிபறந்த மாளிகையில் திரும ணத்தைக்
கோதைக்கும் அவனுக்கும் நடத்தி வைத்தார்.
தொடுமுரிமை பெறலானார் திரும ணத்தால்!
துணைவாழ்வு பெறலானார் ஒருமனத்தால்.
கடவுள்துணை இல்லாமல் இரண்டு பேரும்
கண்துணையால் காதலித்தார். இன்பம் கண்டார்.

## மன்னனும் மண்சட்டியும்

ஆரம்ப காலத்தில் அவனோர் மூர்க்கன்;

அதற்குப்பின் அன்னவனோர் சூழ்ச்சிக் காரன்;

ஓரம்போ ஓரம்போ என்று தன்னை

ஒதுக்கிவைத்தோர் தமையெல்லாம் ஒழித்துவந்தோன்.

வீரத்தால் ஒருலட்சம் பேரைக் கொன்ற

வெறிவேந்தன்; பின்னரவன் புத்த பக்தன்.

காரணத்தால் அவன்துறவி; அவன்யார் என்றால்,

காலத்தின் மேல்நீந்தும் அசோக மன்னன்.

வீரத்தை நிலைநாட்டித் தமிழ்ச்சங் கத்தில்

விவேகத்தைப் புலப்படுத்தி ஆட்சி செய்தோன்

ஆரியரின் படைகடந்த செழிய னாவான்.

அவனைப்போல் சிறந்தவனாம் அசோகன், நாட்டைப்

பேரனிடம் ஒப்படைத்து விட்டுப் புத்த

பிட்சாகி உபதேசம் செய்து வந்தான்.

ஈரத்தை நதிநீரில் முன்பு கண்டோன்;

இரக்கத்தில் அதனையவன் பின்பு கண்டான்.

அலையாடும் கங்கைநதி ஓரம் தன்னில்
அம்மன்னன் மிகச்சிறிய குடிசை ஒன்றில்
நிலையாகத் தங்கியபின், நீதி நூலின்
நிழலானான். கர்வத்தைக் கரைக்க லானான்.
மலஞ்சார்ந்த உடல்தழுவி மகிழும் இன்பம்
மற்றபல இன்பங்கள் இணைந்தி ருக்கும்
உலகத்தில் நாட்டததைச் செலுத்தி டாமல்
உணர்ச்சிகளை ஒடுக்கியன்னோன் ஒடுங்கி வந்தான்.

அன்றாடம் தவஞ்செய்தான். நோன்பு நோற்றான்.
அக்பரைப்போல் சிறுபொழுதே உறங்கி வந்தான்.
மன்றத்தில், அரண்மனையில், வீற்றி ருந்தோன்
மண்தரையில் அமர்ந்தபடி பேசி வந்தான்.
நின்றுபயன் தருகின்ற நீதி கூறி,
நெருக்கிவந்த ஆசைகளை நொறுக்கி வந்தான்.
தென்றலில்லா வடநாட்டில், அசோகன் மட்டும்
தென்பொதிகைத் தென்றலைப்போல் இருந்துவந்தான்.

ஓடத்தை விட்டிறங்கி ஒருநாள் மாலை
உபகுப்தர் அன்னவனைக் காண வந்தார்.
மாடத்தில் உலவாமல் ஏழை போன்று
மண்குடிசை தனில்வாழ்ந்து வந்த மன்னன்,
சூடத்தைப் போன்றவராம் அவரை, அந்தத்
துறவியினை வணங்கிவர வேற்க லானான்.
நாடுசுற்றும் புத்தபிட்சும் அவனும், கங்கை
நதிக்கரையில் அமர்ந்தபடி பேசலானார்.

அழுக்குருண்டை உலகத்தில் நாமெல்லோரும்
அவசரமாய்ப் பிறந்துவிட்டோம்; அதனால் கெட்டோம்.
வழுக்கிவிழா திருந்தாலும் மரணம் வந்தால்
வாழ்க்கைவிழா திருப்பதுண்டோ? இருப்ப தில்லை.
விழித்துவிழித் திமைத்தாலும் வெளிச்ச மின்றேல்
விழித்தவிழி தான்கலங்கும். வாழ்வில் என்ன
கிழித்துவிடப் போகின்றோம்? ஒன்று மில்லை.
கிளிப்பேச்சு மனிதனுக்குச் சாவே மிச்சம்.

சுவரின்மேல் ஒட்டிக்கொண் டிருக்கும் வெள்ளைச்
சுண்ணாம்பைப் போன்றதுதான் பதவி யாகும்.
கவலையினால் நம்நினைவு நிமிர்வ தில்லை.
கவலையில்லா மனிதர்களும் உலகி லில்லை.
கவியென்பர், கலையென்பர், காத லென்பர்,
காதலைப்போல் பூதலத்தின் மீதில் இன்பச்
சுவையுண்டோ? என்றிடுவர். ஐயோ பாவம்!
சுரைக்கொடியின் பூக்களிலா வாசம் வீசும்?

என்றுரைத்தான் திடீரென்று துறவி யானோன்.
இவ்வாறு கூறிக்கொண் டிருக்கும் போது,
சின்னதொரு மண்சட்டி கொண்டு வந்து
தெளிவடைந்த வேந்தனிடம் ஒருவன் தந்தான்.
என்பேரன் கொடுத்தானா இதனை? என்றான்.
எதிர்நின்றோன் ஆம்என்றான். அதனைக் கேட்டோன்.
இன்றெனக்கோர் புதுமாற்றம் என்று கூறி
இச்சென்று சட்டியினை முத்தமிட்டான்.

மண்சட்டி என்சட்டி; இதனை மக்கள்

மதிப்பதில்லை என்றாலும் மதிக்கின்றேன்நான்.

மண்ணென்றால் அணுவென்று பொருளாம். பூமி

மண்ணைப்போல் நம்முடலும் அணுவின் சேர்க்கை.

எண்ணங்கள் நம்நெஞ்சின் அணுக்க ளாகும்.

எப்பொருளின் உட்புறத்தும் அணுக்கள் தூங்கும்.

மண்ணணுக்கள் பிரசவித்த பொருள்க ளன்றோ

மாணிக்கம், ஆணிப்பொன், வெள்ளி எல்லாம்.

இக்கருத்தை உணர்ந்தன்றோ எனது பேரன்

இதையெனக்கு விருப்பத்தோ டனுப்பி யுள்ளான்.

எக்கணமும் மாற்றத்திற் குரிய வாழ்க்கை

இவ்வாழ்க்கை என்பார்கள். நேற்றோ என்றன்

பக்கத்தில் பொற்கிண்ணம். இன்றோ என்றன்

பக்கத்தில் மண்சட்டி. களிமண் பள்ளம்.

பக்குவமாய்க் காப்பாற்றா விட்டால், கையே

பாத்திரமாய் ஆனாலும் ஆகுமென்றான்.



பாவேந்தருக்குப் பிறகு ஒரே சிறந்த கவிஞர் சுரதாதான். சுயமரியாதையுடன் பாடும் சுதந்திரக் கவிஞர் அவர்.

-தந்தை பெரியார்

காலத்தை வெல்லும் கவிதைக்குச் சொந்தக்காரர் கவிஞர் சுரதா.

-பேறிஞர் அண்ணா

சுரதா அவர்களை வெகுநாட்களாக அறிவேன். இவருடைய வசன நடை மிகவும் போற்றுதற்குரியது. ஜீவன் நிரம்பியது. பாத்திரத்திற்கேற்ப கருத்துப் பளீரென்று வருகிறது.

-நாமக்கல் கவிஞர் வெ.இராமலிங்கம் பிள்ளை

சுரதாவின் எழுத்துக்குச் சுரதாவின் எழுத்தே நிகர். அவர் யாரையும் பின்பற்றுவதில்லை. திருடுவதில்லை. தானே தோன்றும் சொற்றொடர் ஒவ்வொன்றும் இனிக்கும் கவிதைத் துணிக்கை.

-பாவேந்தர் பாரதிதாசன்